

வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி னாயினும்
திடமுள ரகுகுலத் திராமன் தன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே,

வடமொழியோ, தமிழோ, தெலுங்கோ, கன்னடமோ இவ்வுலகத்திலுள்ள எந்த மொழியாயினும் சரி, வலிமை பொருந்திய இரகு குலத்திலே அவதரித்த ஸ்ரீராமனது சரித்திரத்தை முறைப்படி கேட்பவர், மரணமில்லா நித்திய சூரிகளாகி விடுவார்கள்.

கம்பராமாயணக் காப்புச் செய்யுள் — 14,

# ஸப்தகிரி

மார்ச் - 1991

தனிப்பிரதி ரூ. 1 | மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 10

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ ராமர்
பின்னட்டையில் . சித்திரைப்பெண்
—சித்திரம்: கே. ஜெகதீஷ்

2-வது பக்கம் : ஸ்ரீ கோதண்டராமசுவாமி கோயில் தேர்த்திருவிழா-திருப்பதி.

3-வது பக்கம் : திருமலையில் வஸந்தோத்ஸவம்

சிறப்பாசிரியர்
திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.



# உங்களுடன . . . .

இம்மண்ணுலகம் பிறந்து எத்தனையோ ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்னும் பல்லாயிரக்கணக்கான ஆண்டு களை அது கடக்க உள்ளது. இம்மண்ணில் எத்தனையோ உயிரினங்கள் பிறந்துவிட்டன; பிறந்தும் வருகின்றன. இவ்வுயிர் களைச் சார்ந்து எத்தனையோ நிகழ்ச்சிகள் நிகழ்ந்துவிட்டன. ஆனால் இந்நிகழ்ச்சிகளை எல்லாம் அனுபவித்து நினைத்திடும் உணர்வு மனித இனம் ஒன்றுக்கே உரியதாகும். தன் முன்னோர் கண்டு சொன்னதை, தானே கண்டதை மனிதனால் மட்டுமதான் பிறர்க்குச் சொல்ல முடிந்தது. அவ்வாறு சொல்லுமபோது காலத்தை ஒரு அளவாகக் கொண்டு, அதனை மையமாகக் கொண்டு தன் நினைவுகளை, தன் அனுபவங்களை பிறருடன் பங்கிட்டுக் கொண்டான். இவ்வகையில் காலத்தை நேற்று, இன்று, நாளை என்று பிரிக்க முற்பட்ட காலத்து, நாடு போற்றும் ஒரு மகானின், அறிஞனின் பிறப்பையும், இறப்பையும் மையமாகக் கொண்டு கடந்த காலத்தையும், நிகழ் காலத்தையும் கூறுபோட்டான் மனிதன். இந்த முறையைத்தான் உலக நாடுகள் யாவும் காலத்தைப் பல ஆண்டுகளாகப் பிரித்திடும்போதுபின்பற்றின. இதனைக் கொண்டுதான் உலக வரலாறும் தன்னை இனங்காட்டியது.

ஆனால் இப்புண்ணிய பாரதம் மட்டும் இப்பெரிய கால அளவை வெறும் அறுபது ஆண்டுகளாக மட்டுமே பிரித்ததேன்? சற்றே சிந்தித்தால் இம்மண்ணின் மாண்பினையும் ஆன்றோரின் நுண்மாண்நுழை புலத்தையும் அறிந் தின்புற முடியும். வேதம் கூறிட்ட, வேதச் சான்றோர்கள் கடைபிடித்திட்ட முறைகளின் நடவடிக்கைகளின் பின் னணியில் வாழ்க்கை உண்மைகள் பல பொதிந்துள்ளன. இவ்வுலகத்தில் எந்தப் பகுதியில் பிறந்திட்டாலும் ஒரு மனிதனின் சராசரி ஆயுட்காலம் அறுபது என்பதை யாவராலும் மறுத்திட முடியாது. அழகும், அறிவும், பதவியும் புகழும் ஒருவனுக்கு அமைய வேண்டுமானால அதற்கான வாய்ப்புக்கள் முயற்சிகள் தன் வாழ்க்கையில் ஒருவனுக்கு அறுபது ஆண்டுகளுக்குள்ளேயே அமைதல் வேண்டும். அறுபது ஆண்டுகள் கடந்ததும் ஒவ்வொருவனும் மரணத்தை நோக்கி அடியெடுத்து வைக்க ஆரம்பிக்கின்றான் என்பது தவிர்க்க முடியாத காலத்தின் கட்டளையாகும். இந்த அறுபது ஆண்டுகளுக்குள் மனிதன் தன்னைப் பலவாறு மேம்படுத்திக் கொள்ளும்படியான தகுந்த முயற்சிகளையும், உழைப்பையும் மேற்கொண்டு இச்சமுதாயத்திற்குத் தன் பிறப்பினை பயனுள்ளதாக அமைத்தல் வேண்டும் என்பதே நமது ஆன்றோரின் பெரு விருப்பமாகும். அதனை மனதிற்கொண்டுதான் இம்மண்ணின் புண்ணியச் சிலர்கள், பிறந் திடும் மனிதனின் ஒவ்வொரு ஆண்டின் உடல் மற்றும் உள்ள வளர்ச்சியை உன்னிப்பாக, இயற்கை மாற்றங்களின் பின்னணியில், உற்றுக் கவனித்து அவனது வாழ்க்கையை பால்யம், கௌமாரம், யௌவனம், வார்த்தக்யம், தேகாந்தர பிராப்தி எனும் ஐந்து தசைகளாகப் பிரித்து, பொறுப்புள்ளவனாக, மரண பயம் கடந்தவனாகத் திகழச் செய்து, மற் றைய உயிரினங்களைப் போல 'உண்பதும் உறங்குவது'மான வாழ்க்கை முறையை அகற்றி, அவற்றினின்றும் மேம்பட்ட வனாக, சீரிய சிந்தனையை நாளும் பெற்றிட வழிவகுத்தனர். இதன் விளைவாக பிரபவ தொடங்கி அக்ஷய முடிய காலத்தை அறுபது கூறுகளாக்கி, ஒவ்வொரு பெயரும் ஒரு செய்தியை நேரடியாகவும், மறைமுகமாகவும் உணர்த்தி எச்சரிக்கை செய்திடும் வகையில் அவற்றிற்கு அறுபது பெயர்களிட்டனர். பிறப்பும்; அதனைத் தொடர்ந்து உயிரினங்கள் பரந்தும், பின்னர் அவை ஒரு சில அறிவுணர்வுகளைப் பெற்றிடவும், அதனால் மகிழ்சசி அடையவும் என்று பொருள் கொண்டு விளங்கிடும் வகையில் பிரபவ, விபவ, சுக்ல, பிரமோதூத என்ற பெயர்களில் ஆண்டுகள் அமைந்திட, இவ் வாண்டு அவ்வாறு அறிவு பெற்றவை தங்கள் இனத்தைப் பெருகிடும் பொருளாகப் 'ப்ரஜோத்பத்தி' எனும் பெயரில் மலர உள்ளது.

இனத்தைப் பெருக்குவது என்பது மற்றைய உயிரினங்களைப் பொறுத்தவரை அது காமத்தின் விளைவாக அமைந்துள்ளது. ஆனால் மனிதன் தன் இனத்தைப் பெருக்குவது என்பது உடலின்பத்தின் இறுதிப் பயனாக அமை யாது, தன் சந்ததியினைத் தொடரச் செய்யவேயாகும். முறையான ஆரோக்யமான ஒரு சந்ததியினைத் தோற்று விக்கவே ஒரு ஆணும் பெண்ணும் திருமணம் எனும் பிணைப்பில் இணைகின்றார்கள். குடும்ப வாழ்க்கையினை ஒரு புனித வேள்வியாகவே ஆன்றோர் பாவித்தனர். ''கொடுப்பதற்காக அதிகம் பொருள் ஈட்ட வேண்டும், உண்மைக்காக அளவாக பேச வேண்டும், புகழுக்காக வெற்றியைத் தேட வேண்டும் சந்ததிக்காக திருமணம் புரிய வேண்டும்'' என்று காளிதாஸன் கூறியதையும், 'பிரஜாதந்தும் மா வ்யாவச்சேஷிஹி 'என்றபடி 'சந்ததி எனும் நூலிழை அறுந்திடக்கூடாது' என்ற சாத்திரம் செப்பியதையும் கருத்திற் கொண்டால் இல்லறத்தின் சீரிய நோக்கத்தினை அறிந்திடலாம்.

இன்ப துன்பங்கள, வெற்றித் தோல்விகள், ஏற்றங்கள் ஏமாற்றங்கள் ஆகியனவை கொண்டவையே வாழ்க்கை யாகும். இவ்வாழ்க்கையினை எதிர்கொள்வதும், பொறுப்பையும், கடமையையும் செயலளவில் உணர்வதும் திரு மணத்திற்குப் பிறகுதான். இந்த நிலைமை உலக அளவில் பொதுவாக ஒரு மனிதன் பெறும் பொது அநுபவமாகும். திருமணத்திற்குப் பிறகுதான் வாழ்க்கையை அறியவும், அறிந்து செயல்படவும்கூடிய சூழ்நிலையில் தள்ளப்படுகிறான். படைப்பின் சக்கரம் சுழல இனப்பெருக்கம் அவசியம்தான். 'புத்' எனும் நரகம் தன்னைச் சேராதிருக்கவும், தன் குடும்ப விருத்திக்கும், ''பெறுபவற்றுள் யாமறிவதில்லை, அறிவறிந்த மக்கள் பேரல்லபிற' என்றும் 'நன்றி தரும் பிள்ளை ஒன்று பிறந்தாலும் குலம் முழுவதும நன்மையுண்டாம்'' என்றும் 'ஜ்யேஷ்ட ஏபிதுஹ்புத்ர; காமஜா நிதரான் விதுஹீ:' என்று மனு கூறியபடி 'காமத்தால் பிள்ளைகளைப் பெறாமல், இல்லறக் கடமையால் பிள்ளையைப் பெறுவதே பயன்' என்றும் அறிவுறுத்தும்படியான மூத்தோர் முதுரைகளை மலர இருக்கும் இப்பிரஜோத்பத்தி ஆண்டில் சற்றே சிந்தித் தால் அதுவே நம் குடும்பத்தில் ஒரு 'ராம ராஜ்யத்தை' உருவாக்க வழிவகுக்கும்.

# செய்திச் சுருக்கம்

ரூ. 30,000 பெறுமான பித்தளை எண்ணெய் விளக்கு ஒன்று அண்மையில் திருமலைக் கோயிலுக்கு காசியைச் சார்ந்த ஸ்ரீ ஸுவீந்திர தீர்த்த சுவாமிகள் அன்பளிப்பாக அளித்தார். தேவஸ்தானத்தின் சார்பில் இணைச் செயலாட்சித் தலைவர் திரு. ஜே. ஜனார்த்தன் நாயுடு அவர்கள் அவ்விளக்கினைப் பெற்றுக் கொண்டார்.

ஃ

தாக்குதல் படை :

நாட்டில் நாளுக்கு நாள் பெருகி வரும் வன்முறைகளை மனதிற் கொண்டு திருமலைக் கோயில் மற்றும் யாத்திரிகர்களின் பாதுகாப்பினை மனதிற் கொண்டு 30 நபர்களைக் கொண்ட 'அதிர்ச்சித் தாக்குதல் படை' ஒன்றினை ஏற்படுத்த மேலாண்மை கருதி உள்ளது. இதற்கு 'இந்தியத் திபேத் எல்லைப் பிரிவி' னைச் சார்ந்த இராணுவத்தினரின் உதவி நாடப்படும். தற்போது கோயில், ஆயுதப்படைப் பிரிவினரின் கண்காணிப்பில் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

ஃ ஃ ஃ

திருப்பதியில் கட்டப்பட்டு வரும் அதிநவீன மருத்துவமனை ஒன்று தி. தி. தே. நிதி உதவியுடன் ஒரு தன்னாட்சி நிறுவனமாக செயற்படும்.

ஃ ஃ ஃ

திருப்பதி நகர பாதாள சாக்கடைத் திட்டத்திற்காக தி. தி. தே. பங்காக ரூ. 8.5 கோடி வழங்கப்படும் என்று ஆந்திர மாநில முதல்வர் திரு என். ஜனார்த்தன ரெட்டி அவர்கள் அண்மையில் ஒரு விழாவில் குறிப்பிட்டார்.

ஃ ஃ ஃ

ஹைதராபாத்தைச் சார்ந்த அன்னமாசார்யா டிரஸ்ட் ஆதரவில் திருமலை ஆஸ்தான மண்டபத்தில் 6-2-91 அன்று 'அன்னமய்யா நாட்டிய நாடகம்' ஒன்று நடைபெற்றது இந்நிகழ்ச்சிக்கு ஆந்திர அரசு தலைமைச் செயலர் (வருவாய்) திரு. கே. எஸ். ஆர். மூர்த்தி அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார்.

ஃ ஃ ஃ

ஜெர்மெனியில் மியூனிக் கலைப் பல்கலைக் கழகத்தில் 'அன்னமய்யா பிரிவு' ஒன்றும், இங்கிலாந்தில் 'அன்னமய்யா மேலாண்மை அறக்குழு' ஆதரவில் 'அன்னமய்யா பிரிவு' ஒன்றும் செயற்பட உள்ளது.

ஃ ஃ ஃ

17-2-91 அன்று தமிழ்நாடு ஆளுநர் திரு. பீஷ்ம நாராயண சிங் அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்தார்.

ஃ ஃ ஃ

ஹைதராபாத்தில் நவீன வசதிகளுடன்கூடிய 'ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலாக்ஷேத்திரம்' எனும் கலை மண்டபம் ஒன்று தி. தி. தேவஸ்தானத்தாரால் கட்டப்பட உள்ளது. இக்கலை மண்டபம் திருமணம் மற்றும் கலை நிகழ்ச்சிகள் நடைபெற ஒதுக்கப்படும். இக்கட்டிடத்திற்கான இடத்தினை வழங்குமாறு ஆந்திர அரசினை தி. தி. தே. கேட்டுக் கொண்டுள்ளது.

ஃ ஃ ஃ

பாராட்டு விழா :

திருப்பதியில் தி. தி. தே. நிருவாகக் கட்டிட வளாகத்தில் 28-2-91 அன்று தி. தி. தே. ஊழியர் சங்கத்தினரால் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுவின் தலைவர் திரு. டி. சுப்பராமி ரெட்டி, குழு உறுப்பினர்களான திரு. வி. துரைசாமி ராஜு (சென்னை) திரு. எம். ரவீந்திரா ரெட்டி (ஹைதராபாத்) திரு. சி. வீராகவலு (ஹைதராபாத்) திரு. சத்திராஜு (ஆந்திர அரசு அறநிலையத்துறை ஆணையர்) ஆகியோர் பாராட்டப்பட்டனர்.

ஃ ஃ ஃ

புதிய இரயில் திட்டங்கள் :

இந்தியாவின் முக்கிய மாநகரங்களான தில்லி, பம்பாய், கல்கத்தா போன்ற இடங்களிலிருந்து நேரடியாக, திருப்பதியை அடைந்திடும் வகையில், இரயில் போக்குவரத்து ஒன்று செயற் படுத்தப்படவும், சென்னை-திருப்பதி செல்லும் இரயில் ரேணிகுண்டாவில் தங்களுடைய இரயில் எஞ்சின் மாற்றுவதால் ஏற்படும் வீணான கால நேரத்தைத் தவிர்த்திடும் வகையில் அவ்இரயில், கள் ரேணிகுண்டாவிற்குச் செல்லாது நேரடியாக திருப்பதியை சேரும் வகையில் 'சுற்று இருப்புப் பாதை' ஒன்றினை அமைத்திடவும், திருப்பதி-காட்பாடி குறுகிய இருப்புப் பாதையினை அகல இருப்புப் பாதையாகவும், பாகாலா-காட்பாடி அகல இருப்புப் பாதைக்கு அடுத்து மற்றொரு அகல இருப்புப் பாதை அமைத்து, பெங்களூரையும் திருப்பதியையும் நேரடியாகவும், விரைவான பயண நேரம் அமையும்படியாகவும், திருமலைக்குச் செல்லும் யாத்திரிகர்கள், நகரத்திற்குள்ளே செல்லாமல் நேரடியாக மலைக்குச் செல்ல வழி வகுக்கவும் திருப்பதி மேற்கு இரயில் நிலையத்திலிருந்து சந்திரகிரி அடுத்துள்ள மலையடிவாரமான ஸ்ரீ வாரி மெட்டு எனும் பகுதியினை இணைத்திடும் வகையில் சுமார் 10 கி. மீ. நீளமுள்ள அகல இருப்புப் பாதை அமைக்கவும், திருப்பதி இரயில் நிலையத்திலிருந்து அலிபிரி மலையடிவாரம் வரை இருப்புப் பாதையினை நீட்டிக்கவும், ஆக இவற்றிற்கான தகுந்த இரயில் போக்குவரத்து ஏற்பாடுகளை மேற்கொள்ள தி. தி. தேவஸ்தானம் இரயில்வே துறையினைக் கேட்டுக் கொண்டது. இவற்றிற்காகும் செலவில் ஒரு பகுதியை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக்கொள்ளும்.

ஃ ஃ

திருப்பதியிலிருந்து ஸெகந்திராபாத்திற்கு குண்டூர் வழியாகச் செல்லும்படியான துரித இரயில் வண்டி போக்குவரத்து ஒன்று ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து செயற்படும். இவ்இரயில் வண்டி திருப்பதிலிருந்து இரவு 9 மணிக்குப் புறப்பட்டு அடுத்த நாள் காலை 10.30 மணி அளவில் ஸெகந்திராபாத்தைச் சேரும். அது போன்றே ஸெகந்திராபாத்திலிருந்து மாலை 4-45 மணிக்குப் புறப்படும் இவ்இரயில் வண்டி அடுத்த நாள் காலை 10.15 மணிக்குத் திருப்பதி சேரும்.



# நம்பிக்கை நெஞ்சில் வை

திரு. எஸ். ரங்கசுவாமி
சிவகங்கை.

உலக ஆசையைத் துறந்து ஒரு சந்நியாசி ஊரைவிட்டு ஒதுங்கி ஆற்றுக்கு அக்கரையில் வசித்து வந்தார். எப்போதும் பூஜை செய்வதும், நிஷ்டையில் இருப்பதும் அவர் வழக்கம். அவரது பூஜைக்கும், பூஜை முடிந்தவுடன் பால் அருந்தவும், ஒரு பால்காரி தினமும் பால்கொண்டு சென்று கொடுப்பது வழக்கம்.

எப்போதும் சரியான நேரத்தில் பால் கொடுத்து வந்த அந்தப்பெண், சில நாட்களாக படகை ஓட்டிச் செல்பவர் வராததால் தாமதமாகச் சென்று வந்தாள். இதனை சந்நியாசி விசாரித்தார்.

"சுவாமி நான் என்ன செய்வேன், அதிகாலையிலேயே வீட்டை விட்டு கிளம்பிவிடுகிறேன். ஆற்றைக் கடக்க படகுக்காரனுக்காக வெகு நேரம் காத்திருக்கிறேன்" என்று வருத்தம் தோய்ந்த குரலில் பதில் அளித்தாள்.

முனிவருக்கு சிரிப்பு வந்துவிட்டது. 'ஸ்ரீ ஆஞ்சநேயர் மஹா சமுத்திரத்தையே நாம பலத்தால் கடந்துள்ளார். பகவன் நாமத்தை உச்சரித்தே கடக்கமுடியாத பிறவியாகிய பெருங்கடலையே கடந்து விடுகின்றனர் பலர். உன்னால் கேவலம் இந்த சிறிய ஆற்றைக்கூட கடக்க இயலவில்லையே' என்று பரிகசித்தார்.

பால்காரி கொண்டுவரும் பாலும் வெள்ளை, அவளது மனதும் வெள்ளை. கள்ளம் கபடம் இல்லாத வெள்ளை மனது. சந்நியாசி சொன்னதை அப்படியே நம்பினாள். தனக்கு ஆற்றைக் கடக்க சுலபமான வழி கிடைத்துவிட்டதாக பெரிதும் மகிழ்ந்தாள்.

இப்பொழுதெல்லாம் உரிய நேரத்தில் பால் கிடைத்துவந்தது. ஒரு நாள் சந்நியாசி இதனை விசாரித்தார். 'படகுக்காரன் முன்போல் தாமதம் இல்லாமல் இப்பொழுதெல்லாம் சரியாக வருகிறானா? உரிய நேரத்தில் பால் கிடைக்கிறதே' என்றுகேட்டார். "சுவாமி தாங்கள் சொன்னபடியே பகவானின் திருநாமத்தை உச்சரித்தபடியே ஆற்றைக் கடந்து வருகிறேன். படகோட்டிக்காகக் காத்திருப்பதில்லை' என்று மிகவும் பணிவாக யதார்த்தமாக பதில் அளித்தாள்.

சந்நியாசியால் இதை நம்பமுடியவில்லை. தன்னைப் பரிகசிப்பதற்காக இப்படி கூறுகிறாள் என்று நினைத்தார். "நீ இம்முறை ஆற்றைக் கடக்கும் போது என்னையும் அழைத்துச் செல்" என்று தெரிவித்தார்.

கபடமே அறியாத வெள்ளை உள்ளம் கொண்ட பால்காரி அப்படியே செய்வதாக அழைத்துச் சென்றாள். இருவரும் நதிக்கரைக்குச் சென்றனர். பகவானின் நாமத்தைச் சொல்லிக் கொண்டே ஆற்றுநீரின் மேல் தரையில் நடப்பது போல் நடந்து சென்றாள்.

சந்நியாசி ஆற்று நீரில் காலை வைத்ததுமே தன் காவி வேஷ்டி நனைந்துவிடுமே என்ற அதே சிந்தனையில் வேட்டியை தூக்கிப் பிடித்துக்கொண்டு கால் நனைந்தபடியே சிறிது தூரம் சென்றார். மேலும் செல்ல இயலாமல் தவித்தார்.

தெய்வ நம்பிக்கையுடன் தன்னை இறைவன் ஆற்றைக் கடக்கச் செய்வார் என்று பால்காரி நினைத்ததால் அஷ்டமா சித்தியின் ஒரு அங்கமான நீரின் மேல் நடப்பது, அவளை அறியாமலே சித்தித்தது. ஆனால் சந்நியாசி பூஜை புனஸ்காரம் என்று ஆன்மீகத்தில் ஊறியிருந்தாலும், நம்பிக்கையில்லாததால் ஆற்றுநீரில் மூழ்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

இந்த சந்நியாசியைப் போல் நாமும் இருந்து வருகிறோம். 'இறைவனிடம் பற்றுவை, அல்லாதவர்களிடம் பற்றற்று இரு' என்று மகான்கள் அனைவரும் ஒரே மாதிரியாக தெரிவித்த வண்ணம் இருக்கிறார்கள். ஆனால் நாம்தான் தலைகீழாகக் கடைப்பிடித்து வருகிறோம். அல்லாதவைகளிடம் பற்றுடனும், இறைவனிடம் பற்றற்றும் இருந்து வருகிறோம். "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்கிறார் நம்மாழ்வார். புற உலகப் பற்றையெல்லாம் விடுத்து இறைவனிடம் பற்றுவைத்து நம்பிக்கையுடன் சரணாகதி அடைந்தால் இறைவன் நம்மை எல்லா கஷ்டங்களில் இருந்தும் விடுவிப்பார்.

வேதங்களில் கூறப்பட்டிருக்கும் பல உண்மைகளை விளக்கவே புராணங்களில் பல உபகதைகள் சேர்க்கப் பட்டுள்ளன. நம்பிக்கை மிக அவசியம் வேண்டும் என்ற உண்மை தத்துவம் பொதிந்திருக்கும் கதை ஒன்று ராமாயணத்தில் உண்டு. அந்தக் கதைதான் என்ன?

இராவண வதத்திற்குப் பின் இலங்கைக்கு முடிசூட்ட விபீஷணருக்கு பட்டாபிஷேகம் சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சக்கரவர்த்தி திருமகன் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் ஆசியுடன் நடைபெறும் முடிசூட்டு விழா அல்லவா! சிற்றரசர்களும் பேரரசர்களும் ஏராளமாக கூடிவிட்டனர். இந்திரலோகமே இலங்கைக்கு குடிவந்தது போல் கோலாகலமாக காட்சி அளித்தது. எங்குப் பார்த்தாலும் வாணவேடிக்கைகளும், அரங்க நிகழ்ச்சிகளும் நடந்த வண்ணம் இருந்தது. அது

சுவை உணவு விருந்தும் மிகச் சிறப்பாக நடைபெற்றுக்கொண்டே இருந்தது. அன்று இலங்கைப் பட்டணம் சுவர்க்கலோகமாக காட்சி அளித்தது.

விழாவிற்கு கலிங்க தேசத்து சிற்றரசர் இருவர் வந்திருந்தனர். சிறப்பான விருந்திலும், கண்ணுக்கும், காதிற்கும் விருந்தாக நிகழ்ச்சிகளிலும் மகிழ்ந்து இருந்தனர் அன்று மாலை அவசரமாக தமது நாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்ற அரச சபையில் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தை மறந்து விட்டனர். சூரிய அஸ்தமனமாகும் நேரத்தில் தான் அந்த நினைவு ஞாபகத்திற்கு வந்தது. பதறியடித்துக் கொண்டு கடற்கரைக்குச் சென்றனர். பெருத்த ஏமாற்றந்தான் மிச்சம். அங்கு கப்பல், படகு ஏதும் இல்லை. ஏற்கனவே ஏராளமான அரசர்களை அழைத்துச் செல்ல உபயோகப்படுத்தப்பட்டிருந்தன.

விபரம் விபீஷணருக்கு தெரிவிக்கப்பட்டது. பயணமான கப்பல் திரும்பி வர காலதாமதமாகும். இவர்கள் உடனடியாகச் செல்ல என்ன வழியென்று சிறிது நேரம் யோசித்தார். பரம பக்தரான விபீஷ்ணர் உள்ளே சென்று இரண்டு விளக்கும் இரண்டு மூடிய அழகிய பேழையையும் எடுத்து வந்தார். இரு அரசர்களுக்கும் விளக்கும், அந்த சிறிய அழகிய பேழையையும் கொடுத்து “இதை எடுத்துச் செல்லுங்கள், உங்களுக்கு கடலில் வழி கிடைக்கும். குறிப்பிட்ட நேரத்திற்குள் உங்கள் இடத்தை அடைந்து விடலாம்” என்றார். இருவரும் நம்பிக்கையாக பெற்றுக் கொண்டு மகிழ்ச்சியாக கடற்கரையை அடைந்தனர்.

என்ன ஆசசரியம்? கடலில் காலை வைத்ததுமே கடல் வழிவிட்டது!! பேழையின் தெய்வ சக்தியைக் கண்டு இருவரும் வியந்தனர். எவ்வளவு காலம் தவம் செய்து இந்தப் பேழையைப் பெற்றாரோ, இதன் மகத்துவம் அளவில் அடங்காதது என்று முன்னவர் சொல்லிக்கொண்டே நடந்து சென்றார். பின்னவர் இதில் என்னதான் மந்திரசக்தி உள்ளது. பேழைக்கு உள்ளே அப்படி என்ன தான் இருக்கிறது என்று சிந்தித்த வண்ணம் இருந்தார். கடலைக் கடக்க இன்னும் சிறிது தூரம் தான் இருந்தது. பின்னால் சென்றவருக்கு இதனைக்கண்டறிய ஆவல் அதிகரித்த வண்ணம் இருந்தது. எப்படியும் பார்த்துவிடவேண்டும் என்ற ஒரே முடிவுக்கு வந்து, அதை மெதுவாகத் திறந்தார். உள்ளே ஒரு சிறு ஓலைச் சுவடி மட்டும் இருந்தது. வேறு எதையும் காணவில்லை. ஆர்வமும், அவசரமுமாக அந்தத் துண்டு ஓலைச் சுவடியினை எடுத்துப் பார்த்தார்.



ஸ்ரீ சோமநாதசுவாமி திருக்கோயில்
காளையார் கோயில்

ஓலைச் சுவடியின் நடுவே ‘ஸ்ரீராம ஜெயம்’ என்று மட்டும் இருந்தது. வேறு எழுத்துக்கள் ஏதும் இல்லை. “என்ன...? இந்த துண்டு ஓலைச் சுவடியினை நம்பித்தான் இந்தக் கடலில் இறங்கினோமா?’ என்று நினைத்தார். அவ்வளவுதான் கடல் மூடிக்கொண்டது. நம்பிக்கையுடன் சென்ற முன்னவர் நலமாக ஊர் போய் சேர்ந்தார். பின்னால் சென்ற சிற்றரசர் நம்பிக்கை இழந்ததால் கடலரசருக்குப் பலியானார்.

நம்பிக்கை தாய் போல், தன்னை அண்டியவனைப் பிள்ளையாகக் கருதி எப்போதும் காப்பாற்றும். இதில் சிறிதும் ஐயமில்லை. இந்த நம்பிக்கையால்தான் உத்தமி திரௌபதியையும், அஜாமிளனையும், கஜேந்திராழ்வானையும் துருவஸ்வாமியையும், வால்மீகி மகரிஷியையும்காப்பாற்றிய தன்றோ?

ஆனால் நாம்தான் கோவிலுக்குச் சென்றால் மனம் அதில் ஈடுபடாமல் நம்பிக்கையற்ற நிலையில் இறைவனை நினைப்பதற்கு பதிலாக சந்நிதிக்கு எதிரே விட்டு வந்த செருப்பையே நினைத்துக்கொண்டு இருக்கிறோம்! அது பத்திரமாக இருக்குமோ இருக்காதோ என்ற கவலை. அப்படியே இறைவனை நினைத்தாலும் அதைக் கொடு, இதைக் கொடு என்று பக்தியை வியாபாரமாக்குகிறோம். இதைச் செய் அதை உனக்குத் தருகிறேன் என்று தரகு பேசுகிறோம். இனிமேல் இவற்றைத் தவிர்த்து “மாமாயன் மாதவன், வைகுந்த’னென்று நாமம் பலவும் நவின்று இறை நம்பிக்கையில் மூழ்கியிருப்போம்.

நம்பிக்கையை நெஞ்சில் வைப்போம்; தித்திக்கும் நம் வாழ்க்கையும்!

ஃ



ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மாமேருபஞ்ச லோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 5×5 செ. மீ. 500-00 6½×6½ செ. மீ. | ரூ. 750/- |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீசாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ மகாசுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | சர்வ சித்தி யந்த்ரம் விமானம் முதல் கார்கள் வரை ஏற்படும் விபத்துக்களைத் தடுத்துக் காக்க வல்லது | 500-00 |
| 10. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 11. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 13. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 14. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 15. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 16. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 17. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 80-00 |
| 18. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 19. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்குக் கிடைக்கும். | |
| 20. | துளசி மணி மாலை ரூ. 150/- ருத்ராட்ச மாலை ரூ. 350[- ஸ்படிக மணி மாலை ரூ. 300/- தாமரைமணி மாலை ரூ. 200/- (ஒவ்வொரு மாலையும் 54 மணிகள் கொண்டு சுத்த வெள்ளியில் வெள்ளி கவசத்துடன் கட்டியது. | |

விபரங்களுக்குத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :


## ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,
153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்),
கோபாலபுரம், சென்னை - 600086.

## ஸ்வாமிஜி முருக பூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர் - டிரஸ்டு,
ஸ்ரீ மாமேரு டிரஸ்ட் நெ. 72 கௌடியா மடம் ரோடு,
சென்னை - 600014 போன் : 861254,

**போன் : கடை : 472013 மா மேரு டிரஸ்டு வீடு: 861254**


**"லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து"**

கடவுளுக்கு உருவம் உண்டா இல்லையா என்பது ஆதிகாலந் தொட்டே கேட்கப்படும்கேள்விதான். பலர் பல உருவங்களைத் தெய்வமாக வழிபடுகின்றனர்.

"பக்தர்களின் விருப்பம் எதுவோ அதுவே இறைவனின் உருவம். மனதில் தோன்றும் பக்தியும், உருவமும் ஒன்றையொன்று சார்ந்து இறை நம்பிக்கையை தோற்றுவிக்கின்றது. அந்த நம்பிக்கையில், பக்தி எனும் காதல் பெருகி, அன்பு செலுத்தி வணங்கும்போது அவனுக்கு உருவம், பெயர் எல்லாம் உண்டாகிறது" என்று கூறுகிறார் பொய்கையாழ்வார்.

"தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே !
தமர் உகந்தது எப்பேர்"—

இதையே நம்மாழ்வாரும்,

"உருவம் உளன் எனில் உளன்,
இலன் எனில் இலன்"

என்று கூறுகிறார்.

# சரணாகதி

பகவான், பகவத்கீதையில், நான்காம் அத்தியாத்தில், "எப்படியெல்லாம் என்னை நாடுகிறார்களோ, அவர்களுக்கு அப்படியே அனுக்கிரக் கிறேன்" என்று பேசுகிறார்.

"வனமாலி கதி சார்ங்கி சங்கி சக்ரீ ச நந்தகி
ஸ்ரீமான் நாராயணோ விஷ்ணுர் வாசுதேவோ பிரகூஷது"

இது விஷ்ணு சஹஸ்ரநாமம். இதன் பொருள்:

"வனமாலையை தரித்தவரும், கதை, சார்ங்கம், (வில்), சங்கு, சக்கரம், நந்தகம் (வாள்) இவைகளை உடையவரும், விஷ்ணு, வாசுதேவன் என்ற பெயர்களும், திருமகளோடு கூடியவருமான ஸ்ரீமான் நாராயணன் காப்பாராக".

இதை வீட்டைவிட்டு கிளம்பும் போது சொல்வது வழக்கம்.

சாதாரணமாக, கதை, சங்கு, சக்கரம், வில், இவைகளை திருமாலை தரிசனம் செய்யும்போது பார்த்திருக்கலாம். ஆனால் நந்தகம் என்ற வாளை எங்கே தரித்துக்கொண்டிருக்கிறார் என்பதை கூர்ந்து நோக்கினால் தான் தெரியும்.

இரண்டு கால்களுக்குமிடையில், வயிற்றுப் பகுதியிலிருந்து கணுக்கால் வரை தொங்கும் உறைக்குள் இந்த வாள் செருகப்பட்டிருக்கும். வாள் பட்டையின் இரண்டு புறமும் கூர்மையுள்ளனதாகவும், குத்துவாள் அமைப்பில் இருக்கும். இதனைத் திருமலைப் பெருமாள் அணிந்திருப்பதைக் காணலாம்.

உலகில், அவ்வப்போது தீய சக்திகள் வளராமல் இருக்க, பகவானின் சின்னங்களின் அம்சமாக, சான்றோர்கள் தோன்றி, நல்லொழுக்கத்தை பரப்பி மக்களை மேன்மையுறச் செய்வது அவசியமாகிறது. இதன் பின்னணியில்தான் திருமாலின் சின்னங்களும் அவதாரம் செய்ய வேண்டியிருக்கிறது.

மனிதனின் புறத்தேவைகளின் சிறப்புக்களை வளர்ப்பது நாகரீகம். அகத்தேவைகளின் சிறப்புக்களை வளர்ப்பது பண்பாடு. உறைவிடம், உணவு, உடை, ஊர்தி, சமயம் என்ற புற சிறப்புக்கள் நாகரீகம், காலம், நாடு, இனம் இவைகளைச் சார்ந்து மாறுபடும். ஆனால் அன்பு, அறம், கடமை, கண்ணியம், இறையுணர்வு ஆகிய அகச் சிறப்புக்கள் எல்லோருக்கும், எந்த காலத்திலும், எந்த இனத்திற்கும் பொதுவானதாகும்.

அனைவரும் சமம் என்ற நிலையில், சைவ, வைணவ, பேதங்களுக்கு இடம் இல்லை என்பதை சில பாசுரங்களின் வாயிலாக நாம் அறியலாம். இதற்குப்

"பொன் திகழும் மேனிப் புரிசடை அம் புண்ணியனும்
நின்று உலகத்தாய நெடுமாலும்— என்றும்
இருவர் அரங்கத்தால் திரிவரேனும், ஒருவன்
ஒருவன் அங்கத்து என்றும் உளன்"

என்ற பாசுரமும்,

"தாழ் சடையும், நீள் முடியும் ஒண் மழுவும் சக்கரமும்,
சூழரவும், பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்ட அருவி பாயும் திருமலை மேல் எந்தைக்கு
இரண் டுருவும் ஒன்றாய் இசைந்து"

என்ற பாடலுமே சான்றுகளாகும்.

எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் பரம்பொருள். அவனை உணர்ந்து சரணடைந்தால், பரமனின் திருவடிகளை எளிதில் அடையலாம். நமது உள்ளத்திலேயே உறைகின்ற அவனை, எங்கெங்கோ ஏன் தேடிப்போக வேண்டும் என்று வினவுவதுபோல,

"மனத்துள்ளான் வேங்கடத்தான், மாகடலின்
மற்றும் நினைப்பறிய நீள் அரங்கத் துள்ளான்"

என்று நம்மாழ்வார் மக்களைத்தட்டி எழுப்புகிறார்.

பகவானை அடைய வைணவம் இரண்டு நெறிமுறைகளை வகுத்துள்ளது. ஒன்று பக்தி நெறி. மற்றொன்று பிரபத்தி நெறி என்ற சரணாகதி. பற்றுதலை எல்லாம் பற்றி இறுதியில் பகவானை பற்றுவது பக்தி நெறி. விடுவதை எல்லாம் விடுத்து இறுதியில் தன்னையும் விடுவது சரணாகதி. (தன்னையும்-நான் என்ற ஆணவம்).

ஒருவன், "நான்" என்ற ஆணவத்தை என்று விடுகிறானோ அன்றே அவன் பகவானின் அருளுக்குப் பாத்திரமாகிறான்.

இதன் மூலம் பகவானின் அருளைப் பெற்று அனைவரும் நலமுடன் வாழ்வது திண்ணம்.

ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளில் சரணமடைந்தால் அப்பகவான் நம்மை எல்லா பாவங்களிலிருந்தும் விடுவித்துத் தீய சக்திகளிடமிருந்து காப்பாற்றித்தன்னுடையபேரருளால் நம்மை ஆனந்திக்கச் செய்வார் என்பதில் ஐயமேதுமில்லை.

கவிஞர். நீ. த. வெங்கட்,
ஒரத்தி.

# பக்தனின் பெருமை

திருமதி. டி. ஆர். மேகலை,
செங்கல்பட்டு.

கிருஷ்ணாவதாரத்தின் போது இராம பக்தனான அனுமனுக்கு சீதா ராமனாய்க் காட்சி தர விரும்பினார் கிருஷ்ணர். அதே நேரத்தில் சத்ய பாமா பலராமனின் கர்வத்தை ஒடுக் கவும் தீர்மானித்திருந்தார்.

அப்போது நாராயணனின் புக ழைப் பாடிக் கொண்டே நாரதர் வர வும், "வரவேண்டும் நாரதா! உன் னைத்தான் எதிர்பார்த்திருந்தேன்". என்று நாரதரை வரவேற்றார் கிருஷ்ணர்.

"கிருஷ்ணா! எனக்காக நீ காத் திருந்தாயா! எதற்கு?"

"கிருஷ்ண பக்தியிலும் ப்ரேமை யிலும் தன்னைவிடச் சிறந்தவர் பூவுலகில் இல்லை என்பதில் மகா கர்வம் பாமாவுக்கு. பலராமனுக்கோ தன்னை வெல்லும் பலசாலி இல்லை என்று மகாமகா கர்வம். இவர்களின் கர்வத்தை ஒடுக்க உன் உதவி வேண் டும்." என்றார் கிருஷ்ணர்.

"பிறர்க்கு...... ஏன் இந்த கிருஷ் ணனுக்கே கூட என்னைத் தவிர வேறு யார் உதவ முடியும்?" என்று நினைத்த நாரதருக்கும் கர்வத்தால் தலை கனத்தது.

நாரதரின் நினைப்பு கிருஷ்ண னுக்கு சிரிப்பைக் கொடுத்தது. 'சரி தான், பாமா பலராமனோடு சேர்த்து நாரதனையும் தண்டிக்க வேண்டியது தான்' என்று நினைத்ததோடு, "நாரதா! திடீரென துவாரகை வந் திருக்கிறாயே விசேஷம் உண்டா?" என்றார்.

"அப்படி ஏதும் இல்லை கிருஷ்ணா. தீர்த்த யாத்திரை செல்ல விரும்பி னேன். உன் ஆசியை பெற்றுச் செல்லலாமென வந்தேன். அவ் வளவுதான்."

"நல்லது நாரதா! துவாரகை கடற் கரையில் அனுமன் தியானத்தில் இருப்பான். அவனிடம் போய் நான் சொன்னதாய்க் கூறு. அவனே உனது தீர்த்த யாத்திரையை நல்லபடி முடித்து வைப்பான். அப்படியே அவனையும் துவாரகையின் அரண் மனைக்கும் அழைத்து வா". என்று நாரதரை அனுப்பி வைத்தார் கிருஷ் ணர்.

தியானத்திலிருந்த அனுமனைக் கண்டு ஆச்சர்யத்திலாழ்ந்த நாரதர், "ஆகா... என்ன தேஜஸ்... என்ன தேஜஸ்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டே மெய் மறந்தவராய் தானும் இராம நாமத்தை ஜபிக்கத் தொடங்கினார்.

இராம நாமத்தால் கவரப்பட்ட அனுமன் நாரதரைக் கண்டு மகிழ்ந்து விவரம் கேட்டார்.

"தீர்த்த யாத்திரை செல்ல விரும்பி னேன். உன் உதவியைப் பெறும்படி கிருஷ்ணர் என்னை அனுப்பி வைத் தார்."

'மிக்க மகிழ்ச்சி நாரதரே!' என்று துள்ளி எழுந்த அனுமன் நாரதரிட மிருந்த வீணையை பத்திரப்படுத்தி விட்டு, 'கவலையை விடுங்கள் நாதரே! நானே உங்களைப் பெருங் கடல்களிலும் நதித்துறைகளிலும் நீராட்டி மீண்டும் துவாரகை கொண்டு வந்து சேர்க்கிறேன்' என்று கூறித் தன் வாலினால் நாரதரைச் சுற்றி வளைத்து இராம நாமத்தை ஜபித்தபடி ஆகாயத்தில் பறந்தார்.

அனுமனின் அசுர பலமும் வாயு வேகமும் நாரதரை நடுங்க வைத்தது. எதிலும் நிலையில்லாமல், 'நாரா யணா... ராமா' என்று முனகிய நார தர், 'ஆஞ்சநேயா! போதும், என்னை விட்டுவிடு' எனக் கெஞ்சினார்.

நாரதரின் கெஞ்சலைப் பொருட் படுத்தாத அனுமன், அவரை எல்லா நதிகளிலும் கடல்களிலும் நீராட வைத்து மீண்டும் துவாரகை வந்து சேர்ந்தார்.

அசதியோடு வந்து நாரதரைக் கண்ட கிருஷ்ணர், 'என்ன நாரதா? அதற்குள்ளாகவா உன் 'தீர்த்த யாத் திரை முடிந்து விட்டது.' என்றார் கிண்டலாக.

'கிருஷ்ணா போதும் உன் விளை யாட்டு, என் கர்வத்துக்குச் சரியான தண்டனை கிடைத்து விட்டது.'

'அது சரி நாரதா! அனுமனை அழைத்து வரச் சொன்னேனே!'

'மன்னிக்க வேண்டும் கிருஷ்ணா! அனுமன் மறுத்து விட்டான். 'அவர் யார் என்னை அழைக்க? என்னால் வர முடியாது. வேண்டுமானால் அவரை இங்கு வரச்சொல்.' எனக் கூறிவிட்டான்.'

நாரதர் கூறியதைக் கேட்டுக் கொண்டே வந்த பலராமன் பெருங் கோபத்தோடு, 'கேவலம் ஒரு குரங்கு உன்னை அவமதிப்பதா? கிருஷ்ணா! நான்போய் அந்தக் குரங்கை அடித்து இழுத்து வருகிறேன்' என்று ஆவேச மாய்ப் போனார்.

தியானத்திலிருந்த அனுமனிடம் வந்த பலராமன், 'ஏ குரங்கே! நீ தான் அனுமனா?' எனவும், கோபத் தைக் காட்டாமல் அனுமன், 'நான் அனுமன்தான். நீங்கள் யார்?' என அடக்கமாய்க் கேட்டார்.

'நான் பலராமன்' என்று பலராமன் முடிப்பதற்குள் அசுரத்தனமாய் அவர் முகத்தில் ஒரு குத்துவிட்ட அனுமன்,

'பல...ராமனா? நீயா? என் இராமனை விட நீ பலம் மிக்கவனோ? இனி ஒரு முறை இப்படிக் கூறாதே, போ, போய் முதலில் பெயரை மாற்றி வைத்துக் கொண்டு வா. மற்றதைப் பிறகு பேசலாம்' என்றார்.

வீங்கிய கன்னத்துடன் வந்து நின்ற பலராமனிடம், 'என்ன அண்ணா! அனுமனைப் பார்த்தாயா? என்ன சொன்னான்' என்று ஏதுமறியாதவர் போல் கேட்டார் கிருஷ்ணர்.

நடந்ததைக் கூறிய பலராமன், 'கிருஷ்ணா? நீ கவலை கொள்ளாதே அந்தக் குரங்கை வென்று தெருத் தெருவாய் இழுத்து வருகிறேன் பார்' எனச் சபதமே செய்தான்.

'அனுமன் பலம் மிக்கவன், அவனை வெல்ல உன்னால் முடியாது அண்ணா.'

'ஏன் முடியாது? என் பலத்தை அவன் அறியவில்லை, நான் யாரென் பதையும் அவன் அறியவில்லை, வருகிறேன்' என்றுகூறி அனுமனை எதிர்க்கப் படைகளோடு சென்றான் பலராமன்.

பலராமனின் படைகள் அனுமனை எதிர்க்க முடியாமல் சிதறி ஓடியது. பெரும் காயத்தோடும் தன் பலம் தோற்று விட்ட அவமானத்திலும் கிருஷ்ணர் காலில் வந்து விழுந்தான் பலராமன்.

'அண்ணா வருந்தாதே! வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலுண்டு என்றேன். நீ கேட்கவில்லை. அனுமனை நீ அறியமாட்டாய். மீண்டும் நாரதரோடு செல். 'இராமச்சந்திர மூர்த்தி தங்களை அழைக்கிறார்' என்று சொல்லிப் பார். அடங்கி ஒடுங்கி வருவான் அனுமன்' என்று இருவரையும் அனுமனிடம் அனுப்பினார் கிருஷ்ணர்.

நாரதரோடு பலராமன் வருவதைக் கண்ட அனுமன் முன்னிலும் ஆவேசமாய் அவனைத் தாக்க வந்தான். அச்சமயம் நாரதர், 'இராம இராம இராம...' என்று ஜபிக்கவே சாந்தமானான். கோபம் தணிந்து சாந்த சொரூபியாய் நின்ற அனுமனிடம் பலராமன், 'அனுமனே! இராமச் சந்திரமூர்த்தி தங்களை அழைத்து வரும்படிக் கூறினார்' என்றான்.

'என் இராமச்சந்திரமூர்த்தி என்னை அழைத்தாரா? இதை ஏன் முன்பே சொல்லவில்லை. சொல்லி இருந்தால் இத்தனைக் களேபரமும் இல்லையே, வாருங்கள், என் தோள் மீது அமருங்கள்' என்று அனுமன் அவர்களைச் சுமந்து கொண்டு அரண்மனைக்கு வந்தான்.

'அனுமனே அழைப்பு வரும் வரை வாயிலிலேயேக் காத்திரு.' என்றுகூறி நாரதர் போக, அனுமனின் வீரம் பக்தி அடக்கம் இவைகளைக் கண்டு தன் கர்வம் ஒடுங்கியவனாய் நின்றான் பலராமன்.

அனுமன் வாயிலில் காத்திருக்கிறான் என்ற சேதி கிருஷ்ணரை சங்கடப்படுத்த, 'நாரதா! அனுமன் என்னை இராமனாகவும் பாமாவை சீதையாகவும் பார்த்தால்தான் திருப்தி அடைவான். நீ சென்று பாமாவை சீதையைப்போல் வரச் சொல்' என்றார்.

சீதை எப்படி இருப்பாள் என்று யோசித்த பாமா, நாரதரின் அவசரத்தால் பட்டத்து ராணி போன்ற அலங்காரத்தில் கிருஷ்ணர் முன் வந்து நின்றாள்.

'பாமா! சீதை இப்படி இருக்க மாட்டாள். அனுமன் இலங்கையில் கண்ட சீதையைத்தான் அறிவான். நீயும் அப்படித்தான் வர வேண்டும்' என்று கிருஷ்ணர் சொன்னதும் அவளுக்கு அவமானமாகப் போய்விட்டது.

மீண்டும் நன்றாக யோசித்து 'கணவனைப் பிரிந்த நிலையில் சீதை மிகச் சாதாரணமாய்த்தானே இருப்பாள்' என்று நினைத்து அலங்காரமின்றி வந்தாள். அப்போதும் கிருஷ்ணனுக்குத் திருப்தி ஏற்படவில்லை.

'பாமா! இந்த வேலையைச் செய்ய உன்னால் முடியாது.' என்றதும் அழ ஆரம்பித்தவளை பொருட்படுத்தாது கிருஷ்ணர், 'நாரதா! சீக்கிரம் போய் ருக்மணியையாவது சீதையைப் போல் வரச் சொல்.' என்றார்.

செய்தி கேட்டதும் ருக்மணி இருந்த கோலத்திலேயே வந்து நின்றாள், எளிய தோற்றமும் மெல்லிய நடையும் கருணை ததும்பும் முகமுமாய் இருந்த ருக்மணியைக் கண்ட பாமா திகைத்தாள். 'சீதை இவளைப் போல்தான் இருப்பாளோ? இல்லை இவளே சீதையா?' என்று நினைத்தாள். அவளது கர்வம் இருந்த இடம் தெரியாமல் போனது.

'கிருஷ்ணா! ப்ரேமை, வீரம், தொண்டு என்று எல்லாவற்றிலும் சிறந்து விளங்கும் உன் பக்தனின் பெருமையால் எங்கள் மூவரின் கர்வத்தையும் ஒடுக்கிவிட்டாயே!' என்று நாரதர் அனுமனைப் புகழ்ந்தார்.

கிருஷ்ணர் இராமராகவும் பாமா சீதையாகவும் நிற்க சீதாராமனைக் கண்ட மகிழ்ச்சியில் அனுமன் ஆடிப் பாடி ஆனந்தக் கூத்தாடினான்.



# மறதியும் விளைவும்

திரு. சக்தி. கா. நா. தேவராஜன் - காஞ்சிபுரம்.

கைகேயி : (கோசலையைப் பார்த்து) அக்கா வணக்கம்.

கோசலை: வாம்மா, உட்கார். நலம் தானே? உட்கார்.

கைகேயி : நலந்தான் அக்கா. நீங்கள்?

கோசலை : நலந்தான் சகோதரி நலந்தான். நமது மக்கள் இருக்க நமக்கு என்ன குறை சகோதரி.

கைகேயி : ஆமாம் அக்கா, அதில் என்ன சந்தேகம். இருந்தாலும்...

கோசலை : என்ன கைகேயி இருந்தாலும் என்று ஏதோ மறைபொருளாகச் சொல்லுகிறாய். உனது அன்புக்கு உரிய நீ பாசத்துடன் குழந்தைப் பருவத்திலிருந்தே வளர்த்து வந்த எனது மகன் இராமன் ஆட்சி செய்யும்போது என்ன குறை நமக்கு.

கைகேயி : ஆமாம் அக்கா நீங்கள் சொல்வது மிகவும் உண்மைதான். இருந்தாலும்...

கோசலை : என்ன உனக்குச்சந்தேகம் சொல். இருந்தாலும் என்ற சொல்லில் ஒரு மாதிரி...

கைகேயி : என்னால் தானே உங்கள் மகன் கானகம் சென்று பல துன்பங்களையும் கஷ்டங்களையும் அனுபவிக்க வேண்டி இருந்தது.

கோசலை : அதெல்லாம் விதியின் விளையாட்டு சகோதரி, நீ என்ன செய்வாய்.

கைகேயி : அக்கா, நமது மகன் இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று கேள்விப்பட்டு சுமித்திரையுடன் கோயிலுக்குப் போனாயே அப்போது ஏன் அக்கா என்னை மட்டும் கூப்பிடாமல் போய்விட்டாய்.

கோசலை : அதுவா நீ சக்கரவர்த்திக்கு ஆசை மனைவியாக இருக்கிறாய். நாங்கள் கூப்பிட்டால் நீ எங்களுடன் வருவாயோ? உன் அந்தஸ்த்துக்கு நாங்கள் எங்கே? அதனால்தான் எங்களுடன் உன்னை...

கைகேயி : என்ன அக்கா அப்படிச் சொல்லிவிட்டாய். நான் உங்களுக்கு என்ன அக்கா செய்து விட்டேன்? நீங்கள் அன்று என்னைக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு போயிருந்தால்...

கோசலை : என்ன ஆகியிருக்கும் ?

கைகேயி : என்ன ஆகியிருக்குமா? நான் உங்களுடன் கோயிலுக்கு வந்திருந்தால் அந்தப் பொல்லாத கூனி மந்தரை என்னை எழுப்பி இல்லாததும் பொல்லாததுமாகச் சொல்லிக் கடைசியாக "உனது தந்தையின் வீழ்ச்சியும் உள்ளது" என்று என் மனதைக் கலைத்து எனக்குக் காலமெல்லாம் ஒரு கெட்ட பெயரை உண்டாக்கி விட்டாளே. அது நடக்காதிருக்குமல்லவா? இன்று கூட யாராவது குடும்பத்தில் ஏதாவது சண்டை நடந்தால் இவள் கைகேயியடா என்று ஏளனமாகப் பேசுகிறார்கள். சொல்லுகிறார்கள். இதெல்லாம் இன்றும் எனக்கு மன வேதனையாக இருக்கிறது அக்கா.

கோசலை : மந்தரை சொன்னாலும் நீ யோசித்துப் பார்க்கணும். சம்பரான் யுத்தத்தில் நீ எத்தனைபுத்திசாலியாக உன்னை தியாகம் செய்து யுத்தத்தில் வெற்றியைக் கொடுத்தாய்!

கைகேயி : அது சரிதான், அந்தச் சமயம் கடவுள் எனக்கு நல்ல யோசனையைக் கொடுத்தார். அது இருக்கட்டும் அக்கா. நாதி வந்து இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று சொன்னவுடன் நான் அடைந்த மகிழ்ச்சிக்கும், சந்தோஷத்திற்கும் அளவே இல்லை. அந்த நல்ல செய்தியைச் சொன்ன அவளுக்கு என் கழுத்தில் இருந்த மணிமாலையை கழற்றிக் கொடுத்து ஆனந்தப் பட்டேனே தெரியுமா உனக்கு?

கோசலை : அப்படி இருக்க உனக்கு ஏன் இந்த விபரீதமான மனமாற்றம் ஏற்பட்டது?

கைகேயி : அக்கா அவள் வந்து ராமனுக்குப் பட்டம் கட்டி விட்டால் அரச பரம்பரையில் வந்த உனக்கு ஒன்றும் அதிகாரம் கிடையாது. எல்லா அதிகாரமும் அவன் தாய் கோசலைக்குத்தான் உண்டு. நீ அவளைக் கேட்டுத்தான் எல்லாம் செய்ய வேண்டும். உனது மகன் பரதன் போயும் போயும் உன் வயிற்றில் பிறந்தானே—அவனும் அவனுக்கு அடிமை. இப்படி அப்படி என்று பலவாறாகக் கோள் சொல்லி என்னைமயக்கிவிட்டாள் அக்கா அந்த மந்தரை தோழி கூனி.

கோசலை : உன்னை அரசியல்மேதை என்றும், புத்திசாலி என்றும் சொல்கிறார்களே அப்படி இருந்தும் நீ மயங்கிவிட்டது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. என்னால் நம்பமுடியவில்லையே.

கைகேயி : இல்லை அக்கா நீங்கள் எதை எதையோ நினைத்துக் கொண்டு என்னைக் கேலி பண்ணுவது எனக்குத் தெரிகிறது. அர

சரை உங்களிடம் அணுக ஒட்டாமலும், உங்கள் மகன் இராமனை நான் உங்களிடம் இருந்து பிரித்து வைத்து நான் வளர்த்து வந்ததும் சொல்லாமல் சொல்லி என்னை துன்புறுத்துகிறீர்கள் என்று நினைக்கிறேன்.

கோசலை : நீ சொல்லும் காரணம் உண்டுதான். இருந்தாலும் உன்னைப்போல கொடூரமான வரங்களை வாங்கி எனது மகனையும் மருமகளையும் காட்டிற்கு அனுப்பிய ஒரகத்தியை இதுவரை எங்குமே கண்டதே இல்லை. இனி காணப்போவதும் இல்லை.

கைகேயி : அது இருக்கட்டும் அக்கா. நான் அன்புடன் வளர்த்த இராமனுக்கு முடிசூட்டு விழா நடக்க இருப்பது உங்களுக்குத் தெரிந்தவுடன் எனக்கும் மகிழ்ச்சியாக இருக்குமல்லவா? அப்படி இருந்தும் நீங்கள் செய்தது சரியில்லை. அதனால் வந்த விளைவுதான் இவ்வளவு கஷ்டங்களுக்கும் காரணம். இதில் சந்தேகமே இல்லை அக்கா. என் கஷ்டகாலம்...... உங்களைச் சொல்லி என்ன பயன்.

கோசலை : தப்புதானம்மா. உன்னையும் கூப்பிட்டு அழைத்துக்கொண்டு கோயிலுக்குப் போய் இருந்தால் இத்தனை அனர்த்தங்களும் நடந்திருக்காது. மந்தரையும் கோள் சொல்ல வாய்ப்பிருக்காது. எல்லாம் ஈசன் செயல். நான் தவறு செய்துவிட்டேன் சகோதரி.

கைகேயி : அக்கா அதுமட்டுமா, அன்புடன் பாசத்துடன் நான்வளர்த்த இராமன் மீது கூட எனக்கு வருத்தம்தான். காட்டிற்குப் போக வேண்டுமென்று இது மன்னன் உத்தரவு என்று நான் சொன்ன போது 'ஏன் உங்கள் உத்திரவு என்று சொன்னாலும் நான் போவேன்' என்று சொன்னவன்உங்களைப் பார்த்துக் காட்டிற்குப் போகப் போகிறேன் என்று சொல்லி விடைபெற்று வந்தவன் அம்மாவிற்கும் அரசருக்கும் உண்டாகும் வருத்தத்தை ஆறுதல் சொல்லி போக்கக்கூடியவள் அம்மா சுமித்திரைதான் என்று நினைத்து அங்குச்சொல்லிவிட்டுப் போனவன் தெரிந்து நின்பணி அதுவாகிலும் கானகம் செல்வேன் என்று சொன்ன இராமன் செயல் எனக்கு மிகவும் வருத்தத்தை உண்டாக்கிவிட்டது அக்கா.

கோசலை : அவன் செய்ததுசரிதான். நீ கேட்ட வரங்களைக்கேட்டு பின் அவன் எப்படி நினைக்க முடியும்? ஆனால் அவன் உன்மீது வைத்துள்ள அன்பு உனக்குத்தெரியாது. உதாரணமாகச் சொல்கிறேன் கேள். இராவணவதம் முடித்து வெற்றி அடைந்தபோது தசரத மன்னர் வானுலகத்தில் தோன்றி என்ன வரம் வேண்டும் கேள் ராமா என்று கேட்டபோது அவன் என்ன கேட்டான் தெரியுமா? தந்தையே நீங்கள் வெறுத்த எனது அன்புத் தாய் கைகேயியை உங்கள் மனைவி என்றும், பரதனை மகனென்றும் அங்கீகரிக்கப்படவேண்டுமென்று கேட்டானே. அது மட்டுமா, நாடு திரும்பி வந்தபோது முதன் முதலில் உன்னை வந்து பார்த்து விட்டுத் தானே என்னை, சுமித்திரையைப் பார்க்க வந்தான்.

கைகேயி : ஆமாம் அக்கா, அதைக் கண்டு நான் அடைந்த சந்தோஷத்திற்கு அளவே இல்லை. நான் இராமன் மீது கோபித்துக் கொண்டதும் தப்புதான் அக்கா. என்னை மன்னித்து விடுங்கள். என்ன இருந்தாலும் நான் அன்புடன் வளர்த்த இராமன் அல்லவா?

கோசலை ; கைகேயி, நடந்ததை இருவரும் மறந்து விடுவோம். இனி எல்லோரும் ஒன்றாய் வாழுவோம் வா போகலாம், நேரமாயிற்று சாப்பிட.

கைகேயி : அக்கா அது இருக்கட்டும். முன் நீங்கள் இருவரும் கோயிலுக்குப் போய்வந்த சமயம் உங்கள் பிரார்த்தனை பலிக்கவில்லை அல்லவா. இப்போது நாம் மூவரும் ஒன்றாய்ச் சேர்ந்து கோயிலுக்குப் போய் எங்கள் அன்புமகன் இராமன் இன்னும் பல்லாண்டுகள் நல்லாட்சி புரியவேண்டுமென்று பகவானை வேண்டிக் கொள்வோம். எங்கள் பிரார்த்தனை நல்லபடியாக முடித்துக்கொடுக்க வேண்டுமென்றும் நாங்கள் எல்லோரும் ஒற்றுமையாக இருக்க அருள்புரிய வேண்டுமென்றும் கேட்டுக் கொள்வோம் அக்கா.

(கைகேயி சொன்னபடியே மூவரும் சேர்ந்து ஒன்றாய் கோயிலுக்குப் போய் ஆண்டவனை வேண்டி வணங்கி அவரவர்கள் வெளியே வந்தபோது)

இராகவன் : அம்மா, நீங்கள் மூவரும் எங்குச் சென்று ஒன்றாய் வருகிறீர்கள்? (என்று வணங்கிக் கேட்டான்.)

கோசலை : இராமா! உனக்குப் பட்டாபிஷேகம் என்று கேள்விப்பட்டு நானும், சுமித்திரையும் கோயிலுக்குப் போனபோது உனது அன்புத் தாய் கைகேயியைக் கூப்பிடாமல் போய்விட்டேன். அதனால் ஏற்பட்ட மனக்குறையைத் தீர்ப்பதற்காக உங்கள் நலன் வேண்டி நாங்கள் மூவரும் கோயிலுக்குப் போய் நாராயணனை வணங்கி வருகிறோம்.

[முடிவு : இராமனுடன் சேர்ந்து மூவரும் தங்கள் தங்கள் இல்லங்களுக்கு மகிழ்ச்சியோடு போய்ச் சேர்ந்தார்கள்.]

(இது கம்பனின் கவிதைகளின் பின்னனியில் பின்னப்பட்ட ஒரு கற்பனை உரையாடல்)



# ஐயமும் பிச்சையும்

கற்றறிந்த ஒருவன், 'ஐயமிட்டுண்' என்னும் மூதுரைக்கேற்ப நாளும் ஒருவனுக்கு உணவிட்டுப் பின்தான் உண்ணும் வழக்கத்தைக் கொண்டான். இதற்குப் பங்கம் ஏற்படும் வண்ணம் ஓர் தினம் வெகு நேரமாகியும் யாரும் வராதது கண்டு வருத்தத்தோடு இருக்கையில் தூரத்தே ஒருவன் வரக்கண்டு மிக்க மகிழ்ச்சி கொண்டான். வந்தவனோ, "ஏற்பதிகழ்ச்சி" என்னும் கொள்கையுடையவன் ஆகையால் பிறர் இடுவதை ஏற்க மறுக்கிறான். நீண்ட நேரமாய் இவர்களிடையே விவாதம் நடந்து கொண்டிருக்கையில் மூன்றாமவனாக ஒருவன் வருகிறான். சாமர்த்திய சாலியான இவன், 'நீங்கள் பற்றியிருக்கும் இவ்விரு நீதிகளையும் சொன்னவளும் பெண் பிள்ளையே. மேலும் அவளே "தையற் சொற்கேளேல்" (தையல் = பெண்) என்றும் சொல்லியிருக்கிறாள். வாருங்கள் மூவரும் சேர்ந்துண்போம்" என்றானாம். மேலெழுந்த வாரியாகப் பொருள் கொண்டு இப்படியும் ஓர் வேடிக்கையான கதை நாட்டிலே நடையாடுகிறது. கற்றதனால் தான் அடைந்த பிரும்மஞானத்தை ஆத்மப் பசி உடையோருக்கு வழங்கி அதனால் உண்டாகும் உகப்போடு வாழ்க்கையை நடத்துதல் என்பதே, "ஐயமிட்டுண்" என்பதற்குப் பொருளாகிறது.

பூமிப் பிராட்டியின் அம்சமாய் பெரியாழ்வாரின் செல்வக் குமாரியான சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாளும் திருப்பாவையில், "ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி உய்யுமாறெண்ணி உகந்து" என்று மிக அழகாக அருளிச் செய்திருக்கிறாள். இதற்கு எம்பெருமானின் வைபவத்தினை அனுபவிக்கச் செய்வதே ஐயம் என்றும், அவனின் அடியார்களின் வைபவத்தினை அனுபவிக்கச் செய்வதே பிச்சை என்றும் பொருள் கண்டுள்ளனர் ஆசாரியப் பெருமக்கள். ஆகவே நாமும் பகவத் பாகவத வைபவத்தினைச் சற்றே அனுபவிப்போம்.

ஆதிசேடன், கருடன், சேனை முதலியார் ஆகிய நித்திய சூரிகளைப் போன்றே எம்பெருமானை அனுபவித்துக் கைங்கர்யம் செய்யும் உரிமை ஆழ்வார்களுக்கும் உண்டாகியிருந்தும் அதனை அறியாது சேதனர் போன்று அவர்களும் சம்சாரவிருளிலே வீழ்ந்து உறங்கிக்கிடந்தார்கள். "இச்சரீரமே ஆத்மாவென்றும், சப்த, ஸ்பர்ஸ, ரூப, ரஸ, கந்தங்களாகிற இந்திரிய விஷயங்களே இனிமையானவை என்றும் மயங்கிக் கிடந்தனர். அவ்வாறு மயங்கிக் கிடந்த தொண்டரடிப் பொடியாழ்வாரைத் தன்பால் ஈர்த்துக்கொள்ள வேண்டி பெரிய பெருமாள் (அரங்கன்) அவரின் உறக்கம் தெளியச் செய்து தன்னுடைய சொரூபம், ரூபம், குணங்கள், விபூதிகள் (செல்வம்) ஆகியவற்றை அவருக்குக் காட்டினான். விழித்தெழுந்த இவரைக் கொண்டே 'திருப்பள்ளியெழுச்சி' பாடச் செய்து தான் துயிலெழுகிறான்.

இவரோ 'திருமாலை' என்னும் பிரபந்தத்தில் அவன் திருநாமத்தின் பெருமையை,

"காவலில் புலனை வைத்துக் கலி
தன்னைக் கடக்கப் பாய்ந்து
நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்
தமர்தலைகள்மீதே
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்
நாமம்கற்ற
ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமா
நகருளானே!'

அரசனில்லா நாட்டிலே தீயோர் கை ஓங்கி, நல்லாட்சி கண்டிடவே நாட்டார் நலமடைவது போல், அரங்கனே ஆசானாகக் கற்றுக் கொடுத்த தன் திருநாமத்தின் பலத்தால் பட்டி மேய்ந்திட்ட ஐம்புலன்களையும் தன் கட்டுக்குள் கொண்டு வந்ததோடு மீண்டும் அவ்வழியில் சென்றிடாது காவலிட்டார். உடல் வலிபெற 'டானிக்' சாப்பிடுவது போல் அவன் திருநாமத்தை உச்சரிப்பதால் ஏற்பட்ட வலிமையை அவனிடமே காட்டி, 'நீரே பாரும்' என்கிறார். முன் செய்த பாபகாரியத்தின் பலனை அனுபவித்திடச் செய்ய வல்ல யமனுடைய தலையிலும் அவன் அடியார் கூட்டத்தின் தலைகள் மீதும் அடி வைத்துச் செல்லும் வல்லமை பெற்றார். 'அன்று பிரளயம் கொள்ளாது உலகத்தினை விழுங்கித் தன் வயிற்றிலே வைத்திருந்து பிரளயாபத்து நீங்கினவாறே எல்லோரும் காணும்

திரு. வி. இராகவன்-பள்ளத்தூர்.

படி வெளிவிட்ட உலக முதல்வன் நீ' அன்று மண்ணை உண்ட ஆயாசம் தீர திருவரங்கத்திலே வந்து படுத்தாய். அன்று சாய்ந்த நீ களைப்பு நீங்கி இன்று வரை எழுந்திருக்கவில்லை!' என்றனுபவிக்கிறார்.

தேவப் பெண்ணொருத்தி தன் ஆடல் பாடல்களாலே பெரிய பிராட்டியாரை (இலக்குமி) மகிழ்வித்து அவள் அணிந்திருந்த மலர்

# தேரோட்டிய திருப்பல்லாண்டுப் பதிகம்

தில்லைத் திருத்தலத்தில் விறகு வெட்டும் தொழில் புரிந்து வாழ்ந்தவர் சேந்தனார் ஆவர். நாள்தோறும் சிவனடியார்களுக்கு அன்னம் பாலிப்பதில் அவர் பேரார்வம் கொண்டிருந்தரர். வாட்டும் வறுமையால் ஒரு சமயம் அரிசிமாவைக் களியாக்கிடச் செய்து அதனை அடியார்களுக்கு அளித்திடத் துணிந்தார். தில்லைக் கூத்தனே சிவனடியார் உருவில் அன்று அங்கு வந்தருளினார். அன்புடன் அளித்திட்ட களி உணவு கூத்தனுக்கு இன்னமுதமாயிற்று. உண்டது போக எஞ்சிய களியமுதை கூத்தன் பழைய துணியில் மூட்டைக் கட்டினார். ஆனந்த நடனமாடி பேரம்பலம் புகுந்தார். அடுத்த நாள் தில்லை வாழ் அந்தணர்கள் கோயிலைத் திறந்ததும் பொன்னம்பலம் எங்கும் களியமுது சிதறிக் கிடப்பதைக் கண்டு சிந்தை கலங்கினார்கள். தில்லைக் கூத்தனுக்கு களியமுது படைத்தவர் சேந்தனாரே என்ற செய்தியை அரசன் தனது கனவில் கண்டு கொண்டார். ஊரெங்கும் செய்தி பரவியது. சிவனடியார்கள் அனைவரும் சேந்தனாரை நேரில் கண்டிட பெரிதும் விரும்பினார்கள். திருவாதிரைத் திருவிழாவின்போது களிஉணவு படைத்திடும் வழக்கம் அன்று தோன்றியதே ஆகும்.

தில்லையில் அன்று தேர்த் திருவிழா. பெரு மழையால் தெருவெங்கும் வெள்ளம் புகுந்தது. புறப்படும் போதே தேர் சக்கரம் சேற்றில் சிக்கிவிட்டது. ஊர் முழுவதும் ஒன்று கூடியது. முழு மூச்சுடன் தேரை இழுத்தது. தேர் சிறிதும் நகரவில்லை. சிவனடியார்கள் சிந்தை வாடினார்கள். அப்போது அந்த அற்புதம் நிகழ்ந்தது. "சேந்தனே! தேர் ஓடப் பல்லாண்டு பாடுக". என்ற தெய்வீகக் குரல் வானவீதியில் ஒலித்தது.

தேர் அருகில் நின்றிருந்த சேந்தனார் அவ்வானொலியைக் கேட்டு உள்ளம் பூரித்தார். "மன்னுகதில்லை வளர்க நம் பக்தர்கள்" என்று தொடங்கும் திருப்பல்லாண்டுத் திருப்பதிகத்தை மெய்யுருகப் பாடினார். வடம் பிடிக்காமலே தேர், திருவீதியில் அசைந்தாடி ஓடியது. உரிய நேரத்தில் நிலைக்கு வந்து சேர்ந்தது. இந்த அரிய காட்சியினைக் கண்டு அடியார்கள் ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்தார்கள். சேந்தனாரது அன்பின் திறத்தையும் கூத்தப்பிரானது அருட்செயலையும் எண்ணி எண்ணி பரவசம் கொண்டார்கள். ஆடிப்பாடி அகம் மகிழ்ந்தார்கள்.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

மாலையைப் பரிசாகப் பெற்று வருகிறான். வழியில் துர்வாச முனிவர் எதிர்ப்பட அவரிடம் மலர் மாலையைச் சேர்ப்பிக்கிறாள். ஐராவதத்தின் மீதமர்ந்து எதிரே வரும் இந்திரனிடம் இம்மலர் மாலையை நீட்ட, அதன் பெருமையறியாத அவனும் தன் வாளால் அதனை ஏந்தி யானையின் மத்தகத்தில் போட்டான். யானையும் அதனைக் கீழே தள்ளிக் காலால் மிதித்து நாசமாக்கிற்று. இதனால் மிக்க சினமுற்ற முனிவரும், 'செல்வச் செருக்கினால் இக்காரியம் செய்தாய். உன் செல்வமனைத்தும் கடலினுள் மறையட்டும்' எனச் சாபமிட்டார். தன்னை அண்டிய தேவர்களின் செல்வ மனைத்தையும் மீட்டுத் தரத் திருமாலும் திருவுள்ளம் கொண்டார்.

"அரங்கனே! த ரங்கநீர் கலங்க அன்று
குன்றுசூழ்
மரங்கள் தேய மாநிலம் குலுங்க
மாசுணம்சுலாய்
நெருங்கநீகடைந்தபோது நின்றசூரர்
என்செய்தார்?
குரங்கையாளுகந்த எந்தை! கூறு
தேற வேறிதே"

*(திருச்சந்த விருத்தம் 21)*

மந்தர மலையை மத்தாகக் கொண்டு, வாசுகி என்னும் பாம்பைக் கடை கயிறாகக் கொண்டு ஒரு புறம் தேவர்களும் மறுபுறம் அசுரர்களும் நின்று கடலைக் கடையச் செய்தான். மந்தர மலையோ கடலினுள் அமுங்கியது. மத்தை வலிப்பதால் வாசுகிக்கு நோவு கண்டது. தானோர் ஆமை வடிவு கொண்டு தன் முதுகில் மத்தைத் தாங்கினான். வாசுகிக்கு வலிமையைக் கொடுத்தான். கடல் கடைவோர் சிறிது நேரத்தில் களைப்புற்றனர். இந்நிலையில் தானே யாரும் அறியாத வண்ணம் ஒரு உருவம் எடுத்து, இடமும் வலமும் சாய்ந்திடும் மத்தை அமுக்கிப் பிடித்துத் தானே இரு புறமும் வலித்துக் கடைந்தான். அமுதமும்

கொணர்ந்தான். அடியார்கள் பக்கம் எப்பொழுதும் இருப்பவனாகையால் தானே இவ்வளவும் செய்து அமுதம் எடுத்துக் கொடுத்தும், 'தேவர்களே கடல் கடைந்து அமுதம் எடுத்தார்கள்' என்ற பெருமையை அவர்களுக்கே வழங்கினான். யுத்தத்தில் அரக்கர் சேனையை அழித்தும் இராவணனைத் தானே யுத்தத்தில் அழித்தும் இருக்கையில், 'வானர வீரர்கள் அரக்கர் சேனையை வென்றனர்' என்ற பெருமையையும், விலங்குகள் தானே என விலக்காமல், அவர்களுக்கே சூட்டினான். நித்திய சூரிகளுக்குத் தலைவனானவன் தன் பெருமையையும் கணிசியாது விலங்குகளோடும் புரையறக் கலந்திட்ட அவன் எளிமையிலும், கடல் கடைந்து அமுதம் எடுத்த சாகஸச் செயலிலும் ஈடுபட்டுத் திருமழிசைப்பிரான் அருளிச் செய்கிறார்.

அரையிலே பட்டுப் பீதாம்பரம், சிரசிலே திருவபிஷேகம் பிரகாசிக்கக் கண்டிகை போன்ற அழகிய பல திருவாபரணங்கள் மார்பில் துலங்க, திருப்பவளமும் திருக்கண்களும் சிவந்திருக்க, திருமேனியின் பசுமை வண்ணம் பிரகாசிக்க அலைகடலினூடே அனந்தாழ்வான்மீது சயனத்திருக்கும் கோலத்தினை நம்மாழ்வாருக்கு அவனே காட்ட, ஒப்பு உவமையற்ற அப்பொருளை அனுபவிக்கிறார்.

"செக்கர் மாமுகிலுடுத்து மிக்க செஞ்சுடர்ப்
பரிதிசூடி அஞ்சுடர் மதியம்பூண்டு
பலசுடர்புனைந்த பவளச் செவ்வாய்
திகழ்பசுஞ்சோதி மரதகக்குன்றம்
கடலோன் கைம்மிசைக் கண்வளர்வதுபோல்"

*(திருவாசிரியம்-1)*

என்றும் பசுமை குன்றாத் தாவரங்கள் பொலிந்து நிற்க, ஆங்காங்கு விளையும் பவழங்களாலே சிவந்தும் ஓர் பச்சை மாமலை சிவந்த பெரிய மேகத்தைப் பீதாம்பரமாக உடுத்திக் கொண்டு, ஒளிமிக்க சூரியனை திருவபிஷேகமாய்ச் சிரசிலே பூண்டு, பால் போல் குளிர்ந்த நிலவைப் பரப்பும் மதி கண்டிகையாகப் பிரகாசிக்க, மின்னிட்டுப் பிரகாசிக்கும் நக்ஷத்திரங்கள் சிறந்த பல திருவாபரணங்களாகத் துலங்க, அழகிய திருப்பவளமும் திருக்கண்களும் சிவந்திருக்க, திருமேனியின் பசுமை நிறம் ஒளிவீச, தன் சிசுவை மார்போடணைத்துத் தூங்க வைக்கும் தாயைப் போல், கடலரசன் தன்னிரு கரங்களாலும் அவனை ஏந்திக் கண்வளரச் செய்வது போல் கண்டானந்திக்கிறார்.

மேலும், பரத்துவத்தை நினைத்தவாறே அவர் தெளிந்திருந்து பிறர்க்கு உபதேசம் செய்தார்; எளிமையை நினைத்த போதோ 'எத்திறம்' என்று மோஹித்துக் கிடந்தார்.

"மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடையாப்புண்டு
எத்திறம்! உரலினொடு இணைந்திருந்தேங்கிய எளிவே"

*(திருவாய் 1-3-1)*

வைகறையில் விளக்கின் முன் அமர்ந்து தயிர் கடைகிறாள் யசோதை. "இருளன்ன மாமேனி" எனக் கருமை நிறத்தனான கண்ணன் அவள் நிழலிலே மறைந்து, அவள் பராக்காய் எங்கோ பார்த்துக்கொண்டிருக்கையில், பூதம்தான் விழுங்கியதோ என எண்ணுமாறு திரண்டு மிதந்து வந்த வெண்ணெய் அத்தனையையும் அமுது செய்துவிட்டான். அளவுக்கு மீறில் என்ன வாகுமோவெனத் தாயின் உள்ளம் பதறுகிறது. தாயின்கரம் பட்டது; கேட்டால் வேண்டுமளவு கொடுக்க மாட்டாளே எனகளவு கண்டேனும் உண்ணத் துடிக்கிறது இவன் உள்ளம். களவிற்குத் தண்டனையாய் ஒரு கயிற்றால் மார்பிலே கட்டி மற்றோர் கண்ணியை உரலோடு பிணைத்துக் கட்டுகிறாள். (உரம்=மார்பு). பெரிய பிராட்டி கட்டியணைத்து உகக்கும் மார்பிலே கட்டினாள். மந்தர மலையைப் பிடுங்கி கடலின் நடுநெஞ்சிலே நட்டு நெருக்கிக் கடைந்து அமுதம் எடுத்துக் கொடுத்த பெருந்தோளுடையானைக் கட்டினாள். உலகோரனைவரையும் தன் கட்டுக்குள் கிடக்கச் செய்பவன், தன்னை விடுவித்துக் கொள்ள இயலாதவன் போல் ஓர் அபலையின் கட்டுக்குள் கிடக்கிறான். பிறந்து படைக்க விருந்த நீர்மை என்னாவது எனத்

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண், செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

# பதினாறு பேறுகள்!

பெரியோர்கள் வாழ்த்தும் பொழுது "பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழ்க" என்று வாழ்த்துவர். பதினாறு என்பது குழந்தைகள் அல்ல. பதினாறு செல்வங்கள் ஆகும். அந்தப் பதினாறு பேறுகளையும் காளமேகப் புலவர் மதுரையில் வீற்றிருக்கும் இறைவனிடம் தந்தருளு மாறு வேண்டுகிறார்.

பதினாறு பேறுகள் :

1. புகழ், 2. கல்வி, 3. வீரம், 4. வெற்றி
5. குழந்தை, 6. துணிவு, 7. செல்வம், 8. தானியம்,
9. இன்பம், 10. ஞானம், 11. அழகு, 12. சிறப்பு,
13. குடியிருப்பு, 14. நோயில்லாமை, 15. நல்ல மனம்,
16. நீண்ட ஆயுள்.

செய்யுள் :

துதிவாணி வீரம் விசயம் சந்தானம் துணிவு தன
மதிதானியம் சௌபாக்கியம் போகம் அறிவழகு
புதிதாம் பெருமை அறம் குலம் நோவகல் பூண்வயது
பதினாறு பேறாம் தருவாய் மதுரைப் பராபரனே!

—என். முராரி - சேலம்.

தன்னை விடுவித்துக் கொள்ள முடியாதவன் போல் கிடக்கிறான். இந் நீர்மை பரத்துவத்திலும் காண முடியாது. இத்தனை தாழ்ந்து போவோர் உலகோரிடையே காணாமையினால் இங்கும் காண முடியாது. களவு கண்டு கட்டுண்டுக் கிடப்பதை இங்குக் காணலாமாயினும் இது பெரியோனின் தாழ்ச்சியாகையால் இவரால் பொறுக்க முடியவில்லை.

பரகால நாயகியெனப் பெண்ணுடை போர்த்தி மடலெடுக்கும் சாக்கில், திருமங்கையாழ்வார் அநுபவிக்கிறார்.

"சீரார்கலையல்குல் சீரடிசெந்துவர் வாய்
வாரார் வனமுலையாள்"

(சிறிய திருமடல் 28)

வாசுதேவனே தன் பிள்ளை கண்ணனாய்த் தோன்றியதில் யசோதைக்குப் பெருமை. மஞ்சனமாட்டி, கண்ணுக்கு அஞ்சனம் தீட்டி அலங்கரித்து அவனை அனுப்புவாள். தெருவிலே விளையாடுவதால் திருமேனியில் படிந்து கிடக்கும் புழுதி. குழந்தைகளை அச்சுறுத்துவதற்கு 'அப்பூச்சி' காட்ட கைகளில் இட்டிய அஞ்சனத்தை உடம்பிலே தடவிக்கொள்வான். வெண்ணெய்க் களவினால் கைகளிலும் உடம்பிலும் வெண்ணெய் படிந்து கிடக்கும். இத்தோடு தன் தாயைக் கட்டிக் கொள்ளுவான். அவன்மேல் படிந்து கிடக்கும் இத்தனையும் அவள் உடுத்தியிருக்கும் புடவையில் படியும். கண்ணனின் திருமேனி சம்பந்தம் பெற்ற இவை படிந்ததால் புடவைக்கு ஏற்றம். இத்தனைக்கும் காரணமான அவனையே தூக்கிச் சுமக்கும் பாக்கியத்தால் அவளது இடைக்குச் சிறப்பு. 'எடுத்துக் கொள்ளில் மருங்கையிறுத்திடும்' 'ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும்' (பெரியாழ். திரு.) என்றவாறு எடுத்துக் கொள்ளில் தன் சின்னஞ் சிறுகால்களால் அவள் இடையை நெருக்குவான். மார்போடணைத்துக் கொண்டாலோ வயிற்றிலே பாய்ந்திடுவான். எவ்வளவுதான் பொறுமையோடு இருந்தாலும் இவன் துஷ்டத்தனம் தாங்காது கோபத்துடன் கீழே தள்ளுவாள்.

"அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தான்
அருள் நினைந்தேயழும் குழவி யதுவே போன்றிருந்தேனே"

(பெருமாள் திரு. 5-1)

என மிக்க கோபத்தினால் பெற்றவளும் தன் குழந்தையைக் கீழே தள்ளினாலும் அது அவளின் அன்பை நினைத்தே அவள் கால்களைப் பற்றிக் கொள்ளும். அது போன்றே கண்ணனும் யசோதையின் கால்களைப் பற்றிக் கொள்வான். கண்ணனே பற்றிக் கொள்ளும்படியானது அவளின் கால்கள் ஆகையால் அவைகளுக்குப் பெருமை. இதனால் மனம் இளகி அவனை வாரியெடுத்து மார் போடணைத்து ஆசை தீர முத்தம் சொரிவாள். இவ்வானந்தத்தால் அவள் வாய் சிவக்க புன்சிரிப்பை உதிர்ப்பாள். இவனும் மென்னகை புரிந்து பால் குடிப்பதற்கு அவள் மார்பகத்தைத் தடவுவான் "வல்லவனே! முடிந்தால் அவிழ்த்துக்கொள்" எனச் சவால் விடுவதுபோல் கச்சுக்கொண்டு தன் மார்பை இறுக்கக் கட்டிக்கொண்டிருக்கிறாள்.

கூடல் மாநகரிலே பரதத்துவ நிர்ணயம் செய்து பெருமை பெற்ற பெரியாழ்வாரைப் பட்டத்து யானை மீதேற்றி மந்திரி பிரதானிகள் பண்டிதர்கள் புடைசூழ பாண்டிய மன்னன் வல்லபதேவன் முன்னின்று ஊர் வலம் நடத்தினான். தனயனின் இவ் விழாக் கோலத்தினைக் காண விழையும் தகப்பனைப் போல் ஸ்ரீ லக்ஷ்மி பதி கருடாரூடனாய் ஸ்ரீதேவி பூதேவி

(34-ம் பக்கம் பார்க்க)

# உபநிடதங்களில் மனுஷ்யத்வம்

வேதங்களின் நிறைவுப் பகுதிக்கு, வேதாந்தம் என்றும் உபநிடதம் என்றும் பெயர் சொல்வார்கள்.

வேதங்களில், யாக-யக்ஞம்போன்ற கர்மாக்களைச் செய்யும் முறைகளைக் கூறும் பகுதிக்குக் கர்மகாண்டம் என்றும், ஆத்மஞானத்தை அடைய வழிகூறும் பகுதிக்கு ஞானகாண்டம் என்றும் பெயர்.

ஆத்மாவை அடையும் வழி-அதாவது, ஆத்மஞானம் பெறுதல் என்பதையே முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ள உபநிடதங்களிலும், மனித மனம், இயல்பு, உறவு, மனித சமுதாய முன்னேற்றத்துக்கான சிந்தனைகள் ஆகியவை காணக்கிடைக்கின்றன.

உலகம், நிலையில்லாத வஸ்து. ஆத்மா நிலையாக விளங்கும் ஒரே பொருள். நிலையற்றதைத் துறப்பதன் மூலமே நிலையானதைப் பெற முடியும் என்னும் இழையிலேயே பேச வேண்டிய உபநிடதங்களில், மனிதனின் மண்ணுலக வாழ்க்கைக்கு வளம் சேர்க்கும் சிந்தனைகள் ஆழமாகவும் அழுத்தமாகவும் மிகப் பரவலாகவும் கூறப்பட்டுள்ளன. இது வியப்புக்குரியதேயானாலும், உண்மையாவும் இருக்கிறது.

ஒரு குழந்தை பிறந்தவுடன், அது அழ வேண்டும். அழுதால்தான் அதற்குப் பிராணன் இருக்கிறது என்பது தெரியவரும். தைத்திரீய உபநிஷத் மூன்றாவது வல்லியில்,

ப்ராணாத்த்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே |
ப்ராணேன ஜாதானி ஜீவந்தி ||

என்ற வரிகள், இதனை உணர்த்துகின்றன.

அது சரி, மனிதனுக்கு மட்டுமா பிராணன் உண்டு? எல்லா ஜந்துக்களுக்குமே உயிர் இன்றியமையாதது தானே? பிற உயிர்ப்பிராணிகளிடமிருந்து, மனிதன் எவ்விதம் தனித்வம் பெற்று விளங்குகின்றான்?

முதலாவதாக, சிந்திப்பதற்கு அடிப்படையான அறிவு, மனிதத்வத்தின் சிறப்பு.

ஸ ஹி ப்ரக்ஞானேன ஸம்பன்னம் |
அதோ விக்ஞானம் பவதி |
விக்ஞானம் பஸ்யதி |
வேத ஸ்வஸ்தனம் வேத ||

என்று விவரித்துக்கொண்டுபோகிறது ஐதரேயோபநிஷத். மனிதனுக்கு அறிவு இருப்பதால், தான் அறிந்ததைப் பேசுகிறான்; அறிந்ததைப் பார்க்கிறான்; நாளைய தினம் என்னும் எதிர்காலம்பற்றியும் எண்ணுகிறான். அண்மைப் பொருள்களையும் சேய்மையில் உள்ளவற்றையும் அறிகிறான்.

தான் அறிந்தால் மட்டும்போதாது; அறிந்தவைகளைப் பிறருக்குக் கூறவும் வேண்டும். வாய் திறந்து பேசுவது மனிதனுக்கு மட்டுமே வழங்கப்பட்ட வரப்பிரசாதம். அதனால்தான், பல ஒலிகளை எழுப்புகின்ற வீணையாக மனித உடலை உபநிடதம் உருவகிக்கிறது.

ததனுக்ருதிரஸெள மானுஷீ வீணா பவதி |

வீணையை மீட்டுபவனின் புலமைக்கேற்ப, வீணையின் நாதத்தைப் பிறர் போற்றுவார்கள். அதேபோல், கேட்கின்றவர்களின் மனங்கவரும் சொற்களையே ஒருவன் பேச வேண்டும்.

''கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்''

என்கிறது திருக்குறள்.

எனவே, பிறர் மனம் மகிழும்படிப் பேசுவதற்கும் ஒரு மந்திரத்தையும் ஐதரேயம் உபதேசிக்கிறது.

ஒஷ்டாபிதான: நகுலீ தந்தை: பரிவ்ருதா பவி: |
ஸர்வஸ்யை வாச ஈசானா சாரு மாமி ஹ வாதயேத் ||

என்ற வாக்கியங்களைச் சொல்லிச் சொல்லிப் பயனடையலாம்தானே?

---

திரு. டி. எஸ். கோதண்டராமன், தஞ்சாவூர்.

---

அறிவும் பேச்சும் மனிதத்வமேயானாலும், அறிவை நாமே முயன்று பெற வேண்டும். அப்படிப் பெற வேண்டிய அறிவு இருவகைப்படும் என்கிறது முண்டகோபநிஷத்.

த்வே வித்யே வேதிதவ்யே | தத்ராபரா
ரிக்வேதோ யஜுர் வேத ஸாம வேதோऽதர்வவேத
சிக்ஷா கல்போ வ்யாகரணம் நிருக்தம்
ச்சந்தோ ஜ்யோதிஷமிதி ||
(I:1: 4&5)

இருவகைப்பட்ட அறிவினை அடைய மனிதன் முயலவேண்டும். பரா, அபரா என்று இருவகை. பரா என்பது ஆத்ம ஞானத்தைப் பற்றியது. அபரா என்பது இவ்வுலக வாழ்க்கைக்குத் தேவையான வேதங்கள், வேதாந்தங்கள் போன்ற நூல்களைக் கற்பதன் மூலம் பெறப்படும் அறிவு. உலகில் நல்லவண்ணம் வாழ்வதற்கு வழிகாட்டும் நன்னூல்களைக் கற்க விழைவதும் மனிதத்தன்மையின்

# விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஒ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத் தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

அடிப்படைகளில் ஒன்று என்பதை இவ்வுபநிடத வரிகள் சுட்டிக்காட்டுகின்றன.

நூல்களைப் படித்து, ஏராளமான செய்திகளை மூளையில் திணித்துக் கொள்வதை அறிவு வளம் என்று சொல்ல முடியாது. 'நான் மிகவும் நிறையப் படித்தவன்' என்று கர்வப்பட்டுக்கொள்வதும்கூட ஒரு இழிவான மனிதத் தன்மைதான். இத்தகைய அறிவுக் குருடர்களிடம் போகிறவன்பாடு படாதபடாகிவிடும் என்று உபநிடதம் அறிவுரை வழங்குகிறது.

**அவித்யாயாமந்தரே வர்த்தமானா:**
**ஸ்வயம் தீரா: பண்டிதம் மன்யமானா:**
**ஜங்கன்யமானா: பரியந்தி மூடா**
**அந்தேனைவ நீயமானா யதாந்தா: ||**

*(முதல் முண்டகம், 2வது கண்டம் 8வது மந்த்ரம்)*

என்று ஒன்றுக்கு மேற்பட்ட உபநிடதங்களில் காண்கிறோம்.

ஆத்மஞானமாயினும், உலகாயத அறிவாயினும் அறிவைப் பெற விரும்பும் மாணவன் எவ்வாறிருக்க வேண்டும்? அவனுக்குப் பணிவு தேவை; அமைதி தேவை; ஒருமுகப்பட்ட மனம் தேவை என்பதை முண்டகோபநிஷத் வலியுறுத்துகிறது.

**''தஸ்மை ஸ வித்வானுபஸன்னாய ஸம்யக்**
**ப்ரசாந்த சித்தாய சமான்விதாய''**

*(முதல் முண்டகம்; 2வது கண்டம், 13வது மந்த்ரம்)*

என்ற வரி நோக்கத்தக்கது.

மனிதனுக்கு அறிவு இருக்கிறது; பேச்சுத்திறனும் இருக்கிறது. எனவே, மனம் போகிற போக்கில் எதை வேண்டுமானாலும் பேசிவிடலாமா? ''கூடாது உண்மையையே பேச வேண்டும்'' என்பது உபநிடத சாரம். பொய் பேசுவதன்மூலம் தாற்காலிக வெற்றி கிட்டவும் செய்யலாம். அதைக்கொண்டு, பொய் பேசுவதையே நிரந்தர தர்மமாகக் கடைப்பிடிக்கலாகாது. ''உண்மையே வெல்லும்; முன்னேற்றப்பாதையில் நடத்திச் செல்லும்'' என்று கம்பீரமான குரலில் உபநிடதம் முழங்குகிறது.

**ஸத்யமேவ ஜயதி நான்ருதம் ஸத்யேன**
**பன்தா விததோ தேவயான: |**
**யேனாக்ரமன்த்ய்ருஷயோ ஹ்வாப்த காமா, யத்ர**
**தத்ஸத்யஸ்ய பரமம் நிதானம் ||**

*(3வது முண்டகம், 1வது கண்டம், 6வது மந்த்ரம்)*

வெறும் உதட்டளவிலான உண்மையை உபநிடதம் குறிப்பிடவில்லை. உள்ளார்ந்த, மனப்பூர்வமான, நிஜமான உண்மையையே பல உபநிடதங்கள் குறிப்பிடுகின்றன.

**ரிதம் வதிஷ்யாமி| ஸத்யம் வதிஷ்யாமி|**
**தன்மாமவது | தத்வக்தாரமவது|**

என்ற சொற்றொடர்கள், சாந்தி பாடங்களில் திரும்பத் திரும்பக் கூறப்படுவதற்குக் காரணம், சத்தியத்தின் அளவிடமுடியாத ஆற்றலை உணர்த்துவதற்காகத்தான் என்பதில் ஐயமில்லை.

வாக்கும் மனமும் இணைந்து இழைந்து செயல்படுவதுதான் சாத்தியம்.

**வாங் மே மனஸி ப்ரதிஷ்டிதா**
**மனோ மே வாசி ப்ரதிஷ்டிதம் ||**

என்பது சத்தியத்தின் ஸ்வருப விளக்கம்.

இதுபற்றி ப்ரஸ்னோபநிஷத்தில் ஒரு கதை கூறப்பட்டிருக்கிறது.

கோசல இளவரசனான ஹிரண்ய நாபன் என்பவன், பாரத்வாஜ முனிவரின் வழித்தோன்றலாகிய சுகேசனிடம், ஆன்ம சம்பந்தமான ஒரு கேள்வி கேட்டான். இந்த நிகழ்ச்சியைப் பின்னர் ஒரு சமயத்தில், முனிவர்கள் கூட்டத்தில் தெரிவிக்க வேண்டிய நிலை சுகேசனுக்கு ஏற்பட்டது. அப்போது அவன் சொன்னான்: ''முனிவர்களே, ஹிரண்யநாபனின் கேள்விக்கான பதிலை நான் அறிந்திருக்கவில்லை. அதனால், 'அறியேன்' என்றேன். ஆனால், 'தெரியும்' என்று சொல்லியிருந்தால், என் வேரும் வேரடி மண்ணும் இல்லாமல் அந்தப் பொய்யே என்னைச் சுட்டெரித்திருக்கும்!''

சத்தியமே மனுஷ்யத்வம் என்பதற்குச் சான்று வேறு ஏதும் தேவையில்லைதானே ?

மனிதன் உயிர் வாழ்வதற்குப் பிராணனோடு உணவும் தேவை. ஏன், பிராணனே, உணவை நம்பித்தான் உயிர்வாழ்ந்து கொண்டிருக்கிறது !

ப்ராணோ வா அன்னம் | சரீர
மன்னாதம் |
ப்ராணே சரீரம் ப்ரதிஷ்டிதம் | சரீரே
ப்ராண : ப்ரதிஷ்ட்டித : ||

*(தைத்ரீயம்: III–7)*

உயிர் மூச்சே அன்னம். மனித சரீரம் உணவினால்தான் நிலைபெற்றிருக்கிறது. மனித உடலில் பிராணன் உயிர்த்தத்துவமாய் விளங்குகிறது. எனவே, ஆன்மவேட்கையில் மட்டுமல்லாமல், மனிதனாக வாழ வேண்டிய முறைகளிலும் அக்கறை கொண்டிருந்த உபநிடத முனிவர்கள்,

அன்னம் பகு குர்வீத|*(தைத்.111-9)*
என்றும்,

தஸ்மாத் யயா கயா ச விதயா
பஹ்வன்னம் ப்ராப்னுயாத் |
*(தைத். III-10)*

என்றும், உணவுப் பெருக்கத்தினை வற்புறுத்தினார்கள்.

மிருகங்கள் உணவினை அழிக்கும்; மனிதனே உணவுப் பொருட்களை உண்டாக்கும் ஆற்றல் பெற்றவன் என்பதை தைத்ரீய வரிகள் தெரிவிக்கின்றன.

உயிர், அறிவு, பேச்சு, உணவு இவை மட்டுமே நம்முடைய வாழ்க்கையை நிறைவு செய்துவிடமாட்டா. உடலில் நோய்கள் குடிகொண்டிருந்தால், மனத்தில் மகிழ்ச்சி நிலவுமா? ஆகவே, உடலின் அங்கங்களும் உறுதியானவைகளாக இருக்க வேண்டும்; செயலாற்றல் உடையவைகளாக இருக்க வேண்டும் என்ற பிரார்த்தனையை கேனோபநிடத சாந்தி பாட மந்திரம் கற்றுக்கொடுக்கிறது.



முத்தேஸ்வரர் கோயிலின் உட்தோற்றம் - காளேஸ்வரம்

ஆப்யாயந்து மமாங்கானி வாக்
ப்ராணஸ் சக்ஷு:
ஸ்ரோத்ரமதோ பலமிந்த்ரியாணி ச
ஸர்வாணி ||

என்ற வாக்கியத்தைத் தினந்தோறும் ஓதத்தோன்றுகிறது.

இவ்வளவு அடிப்படை இயல்களை இயற்கையாக மனிதன் பெற்றிருந்தாலும், அவனை மனிதனாக அடையாளம் காட்டும் சிறப்பு இயல்புகளையும் உபநிடதங்கல் வலியுறுத்திக் கூறுகின்றன.

மனித குணங்களைப் பெற்றிராத மானுடன், மனித உடல் பெற்ற விலங்காகவே கருதப்படுவான்.

தஸ்யை தபோ தம சர்மேதி
ப்ரதிஷ்டா |
வேதா: ஸர்வாங்கானி ஸத்ய மாய
தனம் ||
(கேன. IV-8)

தவம், புலனடக்கம், தன்னலமற்ற செயலாற்றல் இவையே மனிதத்வத்தின் அஸ்திவாரங்கள்; வேதங்களே உறுப்புக்கள்; மெய்யே இருப்பிடம் என்கிறது கேனோபநிஷத்.

கடோபநிஷத சாந்தி பாடத்தில், இன்னும் அழுத்தமாகவே மனிதத்வம் கூறப்பட்டிருக்கிறது.

ஸஹ நாவவது | ஸஹ நௌ புனக்து|
ஸஹ வீர்யம் கரவாவஹை | தேஜஸ்
வினா வதீதமஸ்து | மா வித்விஷா
வஹை ||

நம் இருவரையும் அவன் காப்பாற்றுவானாக; இருவரும் இணையாய் நுகர்வோமாக; முழுச் சக்தியையும் வெளிக்கொணர்வோமாக; கல்வியினால் ஒளிர்வோமாக? ஒருவருக்கொருவர் பகை கொள்ளாதிருப்போமாக-என்ற வேண்டுதலில் கடைசி வரி-ஒருவருக்கொருவர் பகைகொள்ளாதிருப்போமாக என்ற வரி மனிதத்வத்தின் உயர்நிலைகளில் குறிப்பிடத்தக்கதாகும்.

எனினும் புலன்கள், இன்ப நுகர்ச்சிப் பொருள்கள்மீது மனத்தைப் பலவந்தமாக இழுத்துச் செல்கின்றன என்பது கண்கூடு. அவ்வாறு புலன் நுகர்ச்சிகளில் ஈடுபடுகிறவர்கள் அறிஞர் அல்லர் என்று இழித்துரைக்கிறது உபநிடதம்.

ச்ரேயோஹி திரோऽபிப்ரேயஸோ
வ்ருணீதே
ப்ரேயோ மந்தோ யோககேஷமாத்
வ்ருணீதே ||
(கட. II-31)

மந்த புத்தியுடையவர்கள் கிடக்கிறார்கள்; கூர்த்தமதி படைத்தவர்களுக்கு என்ன விசேஷச் செய்தி அளிக்கிறது உபநிடதம்?

உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்ய வரான்
நிபோதத |
க்ஷுரஸ்ய தாரா நிசிதா துரத்யயா
துர்கம்பதஸ்தத்கவயோவதந்தி ||
(காடகம்: I: 3-14)

விழித்தெழு; நிமிர்ந்து நில்; உயர்ந்தவைகளையே வேண்டுவாய். உன் பாதை கத்தி முனைபோல் கூர்மையானதுதான். ஆனாலும் அதைக் கடந்தேதான் மானுடச் சிகரங்களை எட்டிப் பிடிக்க முடியும் என்று பிரகாசமான நம்பிக்கை ஒளியைக் காட்டுகிறது கடோபநிஷத்.

தனது வாழ்க்கையை எப்படியோ நடத்திக் கழித்துவிடுவதில் மனித இனம் நாட்டம் கொண்டதில்லை. அது, மனித இயல்புக்கு முரணானது. 'எப்படியோ வாழ்வது' என்பது, எல்லா உயிர்ப் பிராணிகளுக்கும் உரியது.

பார்வையை வானத்தை நோக்கி உயர்த்தி, பாதங்களை மலரிதழ் நிறைந்த பாதைகளில் பதித்து வாழும் உன்னதமான சிந்தனைகளே, மனிதனுக்குச் சிறப்புச் சேர்ப்பவை.

அக்னே நய சுபதா ராயே அஸ்மான்
விச்வானி தேவ வயுனானி வித்வான்|
யுயோத்யஸ்மஜ்ஜுஹுராணமேனா
பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம ||
(ஈச: 28)

'அக்னியே, சொற்களால் உன்னை மீண்டும் மீண்டும் வணங்குகிறோம். எங்களைச் செம்மையான நெறியில் அழைத்துச் செல்வாயாக. எங்கள் செயல்களை எல்லாம் நீ அறிவாய். அவற்றில், தீயனவற்றை எடுத்து விடுக' என்ற இறைஞ்சலில், ஞானத்தையும் தூய சமுதாயத் தோன்டையும் காமுற்று நாடி விரும்பும் மானுடனின் வேட்கைக் குரலைக் கேட்கிறோம்.

வாழ்க்கை என்றாலே துயரம் நிறைந்ததுதான். துயரமில்லாத மனிதனே இல்லை எனலாம். மனிதனும் துயரங்களும் பின்னிப்பிணைந்து நிற்பன என்பதுபோல் தோன்றினாலும், இறையுணர்வு நிரம்பப் பெற்றவன் துன்பமுறுவதில்லை என்கிறது ஸ்வேதாஸ்வதரோபநிஷத்.

யதா சர்மவதாகாசம் வேஷ்டட
யிஷ்யந்தி
மானவா: | ததா தேவமவிக்ஞாய
துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி ||
(சுவேத. VI:20)

'ஒரு பாயைச் சுருட்டுவதுபோல ஆகாயத்தைச் சுருட்ட முடியாது. இறைவனை உணராமல் துன்பங்களை ஒழிக்க முடியாது'.

இந்த வரிகளில், 'இன்ன உருவம், இன்ன பெயருடைய கடவுள்' என்று குறிப்பிட்டுக் கூறாமல், 'தேவ' ஒளிமிக்கவன் என்ற பொதுவான சொல்லைக் கூர்ந்து நோக்குங்கால் உபநிடத முனிவர்களின் மிகப்பரந்த மனப்பான்மை தெள்ளெனத் தெரிகிறது.

மனிதனாகப் பிறந்தவன் எப்போதும் ஆன்மாவைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று, கடுமையான ஆணை ஏதும் உபநிடதங்கள் பிறப்பிக்கவில்லை. நமது உடல், பண்பாடு, நெறிகள் ஆகியவையும் கவனத்துக்குரியவை.

கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்த தைத்திரிய உபநிடதத்தில்,

சரீரம் மே விசர்ஷணம் | ஜிஹ்வா மே
மதுமத்தமா | கர்ணாப்யாம் பூரி
விச்ருவம் | ப்ரஹ்மண: கோசோऽஸி
மேதயா பிஹித:| ச்ருதம் மே கோபாய||

என்று ஒரு பகுதி வருகிறது. இதன் கருத்தினை உள்ளடக்கிய தமிழ்ப் பாடல், பாரதியின் எழுதுகோல்மூலம் வெளியாகிறது.

தோளை வலியுடையதாக்கி—உடற்
சோர்வும் பிணிபலவும் போக்கி அரி
வாளைக் கொண்டு பிளந்தாலும் கட்டு
மாறா உடலுறுதி தந்து—சுடர்
நாளைக் கண்டதோர் மலர்போல் ஒளி
நண்ணித் திகழு முகமும் தந்து—மத
வேளை வெல்லுமுறை கூறித் தவ
மேன்மை கொடுத்தருள வேண்டும்.

முழுமையான மனிதனுக்குக் கட்புலனும் செவிப் புலனும் செவ்வையாக இருக்க வேண்டும். அவ்விதமிருந்தால்தான் மனிதனாகப் பிறந்த தன் முழுப்பயனையும் பெறமுடியும். கேட்கும் செவியும் பார்க்கும் கண்ணும் இருந்துவிட்டால்போதுமா? உபநிடத முனிவர்கள் நமக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். தெய்வத்திடம் நாம் கோரும் வரம் எப்படி இருக்க வேண்டும்?

பத்ரம் கர்ணபி: ஸ்ருணுயாம தேவா:
பத்ரம் பஸ்யேமாக்ஷபிர்யஜத்ரா : ||

என்ற வேண்டுகோளில், 'நல்லவைகளையே செவிகளால் கேட்க வேண்டும்; நல்லவைகளையே கண்களால் காணவேண்டும்' என்ற கருத்து, மனிதனின் இதயக் குகையிலிருந்து வெளிப்படுவதாகும்.

ஸாமவேதத்தைச் சேர்ந்த சாந்தோக்கியத்தில், பலவித உபாசனைகள் விளக்கப்பட்டுள்ளன. அவற்றினிடையே, மனித குணங்களைப் பற்றிய குறிப்பும் வருகிறது.

யேऽல்பா; கலஹின: பிசுனா அபவாதி
னஸ்தேऽத யே ப்ரபவோ த்யான-
பாதாப்சா இவைவ தே பவந்தி ||
(சாந். VII: 6-1)

அல்ப மனிதர்கள், கலகம் செய்வார்கள்; கோள்மூட்டுவார்கள்;

(32-ம் பக்கம் பார்க்க)

# பிறை தங்கு சடையானும் புள்ளூர்தியானும்

*திரு. தி. இராசமாணிக்கம்*
*பொள்ளாச்சி.*

சைவமும் வைணமும் இந்து சமயத்தின் இரு கண்கள் எனப் போற்றப் படுகின்றன. சைவத்தில் பிறவா யாக்கைப் பெரியோனாம் சிவபெருமானை முழுமுதற் பொருளாகப் பரவப்பட்டால், வைணவத்தில் அரவணைத் துயிலும் திருமாலை மூலமும் நடுவும், ஈறும் இல்லா முதல்வனாக வணங்கப்படுகிறான். சிவபெருமானுக்கு தட்சிணாமூர்த்தி, நடராசர், பிச்சாடனமூர்த்தி ஆகிய வடிவங்கள் உள்ளன. அதே போன்று திருமாலுக்கு மீன் முதலாகப் பத்து அவதாரங்களும், வைகுந்த நாராயணன் போன்ற வடிவங்களும் இருக்கின்றன. இந்த இரு பெருந்தெய்வங்களின் ஒருங்கிணைந்த வடிவம் தான் சங்கர நாராயணமூர்த்தியாம்.

சங்கன், பதுமன் என்ற இரு நாகர்கள் இருந்தனர். சங்கன் சிவபெருமானிடத்தும், பதுமன் திருமாலிடத்தும் அன்பு பூண்டவர்கள். இவர்கள் இருவரும் சிவபெருமான் பெரியவனா அல்லது திருமால் உயர்ந்தவனா என வாதிட்டு வந்தனர். இந்த ஐயத்தை அன்னை பராசக்தி அண்ணலிடம் வெளியிட்டாள். இறைவன் அன்னையிடம் மண்ணுலகத்தில் புன்னை வனத்தில் தவம் புரிந்தால், தக்க விடை கிடைக்கும் எனப் பதில் அளிக்கிறான். ஆடி மாதம் முழு நிலாவன்று இறைவன் அன்னைமுன் சங்கர நாராயணனாகத் தோன்றுகிறான். இந்த வடிவை,

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்
மழுவும் சக்கரமும்
சூழ்ரவும் பொன்னாணும் தோன்று
மால்-சூழும்
திரண்டருவி பாயும் திருமலை மேல்
எந்தைக்கு
இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து"
(மூன்றாம் திருவந்தாதி-63)

எனப் பேயாழ்வார் தமது திருப் பாசுரத்தில் வெகு அழகாகப் பாடியுள்ளார். சேரமான் பெருமாள் நாயனார் தமது "பொன் வண்ணத் திருவந்தாதி"யில்,

"இடமால் வலந்தான் இடப்பால்துழாய்
வடப்பால் ஒண்கொன்றை
வடமாலிடந்துகில் தோல்வலம் ஆழி
இடம்வலம் மான்
இடமால் கரிதால் வலம்சேது இவ்
னுக்கு எழில் நலஞ்சேர்
குடமால் இடம்வலம் கொக்கரையாம்
எங்கள் கூத்தனுக்கே"

என இத்திருவுருவை சொல்லோவியமாகப் படைத்துள்ளார்.

சிவபெருமான் பெரியவனா அல்லது திருமாலா என்ற கேள்வி பண்டைக்காலந்தொட்டே இருந்து வந்துள்ளது.

"பாதியாயுடன் கொண்டது மாலையே"
(திருஆலவாய்-2)

என ஞான சம்பந்தப்பெருமானும்,

"நாரணனை இடப்பாகத்து அடைத்
தார் போலும்"
(திருவீழிமிழலை-2)

என அப்பர் அடிகளும்,

"மாலொர் பாகமுந்தாம் உடையவர்"
(திருப்பனையூர்-3)

என ஆளுடைய அடிகளும் தமது திருப்பாசுரங்களில் அருளியுள்ளனர். அமரர்கள் தெய்வம் எனப் போற்று கின்ற அரியைவிட சிவபெருமானுக்குத் தேவி இல்லை என இத்திருவுருவினை நாவின் மன்னர் தமது திருவையாற்றுத் திருப்பதிகத்தில் சிறப்பிக் கின்றார்.

"பிரிவிலா அமரர்கள் கூறப்பெருந்
தகைப்பிரான் என்று ஏத்துப்
அரி அலாற்தேவி இல்லை ஐயன்
ஐயாறனார்.'

என்பது அவரது திருவாக்கு. இவற்றினின்றும் சிவபெருமான் தன் ஒரு பாகத்தைத் திருமாலுக்கு அளித்தான் என்பது தெளிவாகிறது. இது சிவபெருமான்தான் முழுமுதற் பொருள் என்ற கொள்கையின் அடியாகப் பிறந்தது.

திருமால் அடியார்களாகிய ஆழ்வார்களில் மங்கை மன்னன்,

"பிறை தங்கு சடையானை வலத்
தேவைத்து" (3-4-9

என்றும், பெரியாழ்வார்,

"மாமதிள்மூன்று எய்த இறையான்
நின் ஆகத்து'
(முதல். திரு-28

என்றும், நம்மாழ்வார்,

"ஏறனை... தன்னுள் வைத்து"(2-2-3
என்றும் தம் திருப்பாசுரங்களில் அருளியுள்ளனர். இவை திருமால் தன் ஒரு பாகத்தை சிவபெருமானுக்கு அளித்தான் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. இது திருமால்தான் பரம்பொருள் என்ற அடிப்படையைக் கொண்டது.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

சிவபெருமான் பெரியவனா அல்லது சக்தியா என்ற கேள்விக்கு இடமின்றி சைவமும் சாக்தமும் அடைந்த சமரச நிலையை அர்த்த நாரீசுவர வடிவம் உணர்த்துகிறது; அது போன்று அரி அரன் வடிவம் சைவத்திற்கும் வைணவத்திற்கும் ஏற்பட்ட சமரசத்தின்விளைவு என்பது அறிஞர்களின் கருத்து.

ஆகமங்களின்படி, இந்த வடிவின் வலப்பாதி சிவபெருமான்; இடப்பாதி திருமால். 4 கைகள் கொண்ட இந்த வடிவின் இடப்பாதி திருமால் என்பதற்கு ஏற்ப சங்கும் சக்கரமும் அமைக்கலாம்; அல்லது ஒரு கையில் கதை காணப்பட, மற்றொரு கை கடக முத்திரையில் தொடைக்கு அருகில் உருவாக்கப்பட வேண்டும். வலப்பாதியால் உள்ள இருகைகளில் சிவபெருமான் என்பதற்கு இணங்க, மழு மற்றும் அபய முத்திரையில் இருக்கலாம் அல்லது சூலம் மற்றும் வரத முத்திரையில் இருக்கலாம் அல்லது சூலம் மற்றும் அக்க மாலை இருக்கலாம். இடப்பாதியில் கேயூரம், கங்கணம் போன்ற அணிகலன்கள் இருக்க வேண்டும். வலப்பாதி முழங்கால் வரையில் புலித்தோலாலும், இடது பாதி பட்டாடையாலும் அழகு செய்யப்பட்டிருக்க வேண்டும். உடலின் நிறம் வலப்புறம் வெண்மையாகவும், இடப்புறம் பச்சை அல்லது நீல நிறமாக இருக்க வேண்டும். சமபங்க நிலையில் நிற்கும் இந்த வடிவின் வலப்பாதி அச்சம் அளிக்கும் வகையாலும், இடப்பாதி அமைதியான தோற்றத்துடனும் உருவாக்கப்பட வேண்டும். சிவபெருமானுக்கு உரிய நெற்றிக்கண் நெற்றியில் வலப்பாதியில் பாதி மட்டும் அமைக்கப்பட வேண்டும். "விஷ்ணு தர்மோத்திரம்" என்ற நூலின்படி, இந்த வடிவின் இடப்புறம் திருமாலின் ஊர்தியான கருடனும், வலப்புறம் சிவபெருமானின் ஊர்தியான காளையும் காட்டப்பட வேண்டும்.

தமிழகக் கோயிற் கட்டிடக் கலையின் முதற்கட்டமான குடைவரைக் கோயிலிலும் மற்றும் மலைதனிகளிலும் இந்த வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. எடுத்துக் காட்டாக உலகோர் கண்டு வியக்கும் மாமல்லபுரத்தில் அரிய சிற்பங்களைக் கொண்ட மலை தனி தர்மராஜ இரதம். அதில் முதற்தளத்தில் இந்த வடிவம் அமைக்கப்பட்டுள்ளது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் முன் வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை ஊரு முத்திரையிலும் உள்ளன. பின் வலக்கையில் சிவபெருமான் என்பதற்கு இணங்க மழு உருவாக்கப்பட்டுள்ளது. பின் இடக்கையில் உள்ளது சரியாகத் தெரியவில்லை.

பல்லவர்களைப் பின்பற்றி பாண்டியர்கள் தாங்கள் உருவாக்கிய குடைவரைக் கோயில்களில் இந்த வடிவை அமைத்துள்ளனர். எடுத்துக் காட்டாக, பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டத்தைச் சார்ந்த பிள்ளையார் பட்டி குடைவரைக் கோயிலில் பிள்ளையாருக்கும் இலிங்கத்திருவுருவிற்கும் இடையில் இந்த வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. முதலில் பல்லவ மன்னனாகக் கருதப்பட்ட இது அரிஅரன் வடிவமாக உறுதி செய்யப்பட்டுள்ளது. இந்த வடிவின் தலையில் வலது பாதியில் சடா மகுடமும், இடது பாதியில் கிரீடமும் காணப்படுகின்றன. இந்த வடிவில் இடது புறத்தில் கருடன் இருப்பதால், வலபுறத்தில் இருப்பது நந்திகேசுவரராக இருக்கலாம் என ஊகிக்கப்படுகிறது. பிள்ளையார் பட்டியை அடுத்த குன்றக்குடியில் உள்ள மூன்று குடைவரைகளில் முதல் குடை வரையில் இந்த வடிவம் காணப்படுகிறது. கருவறையின் வலது புறமாக உள்ள இந்த வடிவில் வலப்பாதியில் சடையும் மழுவும், புலி ஆடையும் இருக்க, இடப்பாதியில் கிரிட மகுடமும், பட்டாடையும், சங்கும் அமைக்கப்பட்டுள்ளன.

பல்லவர்களைப் பின்பற்றி பாண்டியர்கள் மட்டுமின்றி, தற்காலத்தில் தர்மபுரி எனப்பெறும் தகடூரைத் தலைநகராக கொண்டு ஆட்சி புரிந்த அதியமான்களும், சேலம் மாவட்டத்தைச் சார்ந்த நாமக்கல் குடைவரைக் கோயில் இத்தகு வடிவத்தை புடைச் சிற்பமாகப் படைத்துள்ளனர். நரசிம்மர் குடைவரையில் கருவறையை ஒட்டி அரிஅரன் திருவுரு அமைக்கப்பட்டுள்ளது. இந்த வடிவின் பின் வலக்கையில் உள்ள மானும் முன் வலக்கையில் உள்ள பாம்பும் சிவபெருமானைக் குறிக்கின்றன. பின் இடக்கையின்மேல் தனியாக உள்ள சங்கு திருமாலை உணர்த்துகிறது. தலையின் வலப்பாதியில் இளம்பிறையுடன் கூடிய

# உங்களுக்குத் தெரியுமா?

**ஸந்தியா காலங்களில் செய்யக்கூடாதது :-**

காலை, மாலை (சூரியன், சந்திரன் சேரும் வேளைகள்) இவைகளை ஸந்தியா காலம் என்பர்.

இவ்வேளையில் சாப்பிட்டால் வியாதியும், தூங்கினால் பித்துக்கள் அந்த இடத்தை மயானமாக கருதுவார்கள். மூதேவியும் அந்த இடத்தை விட்டு நகருவாளில்லை.

தம்பதிகள் சேர்ந்தால் கர்ப்பநாசம். வேதம் ஓதினால் ஆயுள் குறைவும் ஏற்படும்.

**எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் நாட்கள், பலன்கள் பின்வருமாறு :-**

1. ஞாயிறு — துக்கம்
2. திங்கள் — தேஜஸ்
3. செவ்வாய் — அற்ப ஆயுள்
4. புதன் — ஸம்பத்து
5. வியாழன் — தரித்திரம்
6. வெள்ளி — வியாதி
7. சனி — ஸர்வ கார்ய சித்தி

**எண்ணெய் தேய்த்துக் கொண்டு பூரண பலன் பெற முக்கியமானது :**

1. வயிறு காய்தல் (காலியாக இருப்பது)
2. தலைக் காய்தல் (சூடு) தலை உலர்ந்து இருக்கவேண்டும்.
3. தண்ணீர் காய்ந்து சுடு நீராக இருக்கவேண்டும்.
4. சிக்காய் காய்ந்து இருத்தல்.
5. எண்ணெய் காய்ச்சி உபயோகிக்க வேண்டும்.

**யார் யாரிடம் என்ன பலன் கிடைக்கும் :-**

1. விஷ்ணுவை வேண்டினால் — மோக்ஷம் கிடைக்கும்
2. சங்கரனை வேண்டினால் — ஞானம் கிடைக்கும்
3. சூரியனை வேண்டினால் — ஆரோக்கியம் பெறலாம்
4. அக்னியை வேண்டினால் — ஐஸ்வரியம் கிடைக்கும் (தனம்)

**எப்போது பேசக்கூடாது?**

1. ஹோமம் செய்யும் போது வார்த்தை சொன்னால் அக்னி தனத்தை அபகரிக்கிறான்.
2. ஸ்நான காலத்தில் (குளிக்கும் போது) பேசினால வருணன் தேஜஸை அபகரிக்கிறான்.
3. சாப்பிடும் போது வார்த்தையாடினால் யமன் பிராணனை (வயதை) அபகரிக்கிறான்.

அடியார்க்கடியவன்
கேதாண்டபட்டி

சடா மகுடமும், இடப்பாதியில் கிரீட மகுடமும் அமைக்கப்பட்டுள்ளன.

குடைவரைக் கோயில்களைத் தொடர்ந்து கட்டப் பெற்ற கற்றளிகளிலும் இந்த வடிவம் இடம் பெற்றுள்ளது. உதாரணமாக, பல்லவப் பேரரசன் இராஜசிம்ம பல்லவனால் கட்டப் பெற்றதும், சிற்பக்கலையுலகில் தனக்கென தனி இடம் பெற்றதுமான காஞ்சிபுரம் கைலாய நாதர் கோயிலின் கருவறையின் தென்புறச் சுவரில் இந்த வடிவம் உள்ளது. இந்த வடிவில் பின் வலக்கையில் மழுவும், பின் இடக்கையில் சங்கும் உள்ளன. இது எழில் மிக்க சுதையாலான வடிவமாம்.

சங்கர நாராயண வடிவை கருவறையின் பின்புறச் சுவரில் அமைக்கு முறை முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் பின்பற்றப்பட்டது. இத்தகு அமைப்பு திருச்சி மாவட்டம் திருவெறும்பூர் திருவெறும்பீசுவரர் திருக்கோயிலிலும், திருமங்கலம் சாம வேதீசுவரர் திருக்கோயிலிலும் உள்ளதை உதாரணங்களாகக் கூறலாம்.

இவ்வாறு இந்த வடிவம் ஆங்காங்கு உள்ள திருக்கோயில்களில் காணப்படினும், இந்த வடிவிற்கு என்று தனியாகச் சந்நிதி உள்ள திருக்கோயில் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த சங்கரன் கோயிலாகும். மூலவரான வான்மீகநாதர் மற்றும் அன்னை கோமதி அம்மன் ஆகியோரின் கருவறைகளுக்கு இடையில் சங்கர நாராயணனுக்குத் தனிச் சந்நிதி உள்ளது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் பின் வலக்கையில் மழு இருக்க, பின் இடக்கையில் சங்கு காணப்படுகிறது. ஆகம விதிகளின் படி இவை உருவாக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. எழிலுடன் பொலிவுள்ள இந்தத் திருவுரு கண்டுகளிக்கத் தக்கதாம். தமிழகத்தில் சங்கர நாராயணனுக்கு என்று தனிச் சந்நிதி உள்ள திருக்கோயில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.



சிறுவர் பகுதி :

# ஸ்ரீவைணவ ஆழ்வார்கள்

"பொய்கை பூதன் பேயாழ் பொன்
மகிழைக்கோன் மாறன்
செய்ய மதுரகவி சேரர் பிரான்—
வையகமென்
பட்டர்பிரான் கோதை தொண்டர்
பாதப்பொடி
கட்டவிழ்த்தார் வாட்கலியன்"

என ஆழ்வார்கள் பன்னிருராவர்.

முதலாழ்வார்கள் :

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் முதலில் தோன்றியவர்களாதலால் முதலாழ்வார்கள் எனப்படுவர். இவர்கள் மூவரின் தாயின் கர்ப்ப வாசத்தில் பிறவாது மலர்களில் தோன்றியவர்கள்.



1. பொய்கையாழ்வார் :

ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பாஞ்சசன்யத்தின் அம்சமாக பூவுலகு பொலிவுறக் காஞ்சியில் ஒரு தாமரைத் தடாகத்தில் ஒரு பொற்றாமரையில் அவதரித்தார். இறைவனிடம் பேரன்பு பூண்டொழுகி, "திருவந்தாதி" என்ற தலைப்பில் 100 பாசுரங்கள் பாடி இறைவனைத் துதித்தவர்.



2. பூதத்தாழ்வார் :

ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் கதாம்சமாக மகாபலிபுரத்தில் குருக்கத்தி மலரில் தோன்றியவர். பகவானிடத்து பக்தி நிறைந்தவராய் இரண்டாம் திருவந்தாதியைப் பாடியருளினார். (100 பாசுரங்கள்)

3. பேயாழ்வார் :

ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் நந்தக அம்சமாய் திருமயிலையின் மாதவப் பெருமாள் கோவிலுக்கு அருகாமையில் கூவிக்கிணற்றின் இடையில் செவ்வல்லிமலரில் தோன்றியவர். திருமாலிடத்து ஆழ்ந்த பக்தி பரவசத்துடன் மூன்றாம் திருவந்தாதியையும் பாடியவர். (100 பாசுரங்கள்)

திரு. இறையன்பன்
திண்டுக்கல்.

இம்மூவரும் பரந்தாமனின் தாஸர்களாகிப் பல ஸ்தலங்களை வழிபட்டு திருக்கோவிலூர் வந்தடைந்தனர். ஒருவரையொருவர் அறியாதவர்களாகி, பொய்கையாழ்வார் ஒரு வீட்டு இடைகழியில் சயனித்திருக்க, அவ்விடம் பூதத்தாழ்வார் வர, இருவரும் அமர்ந்து கொண்டனர். பின்னர் பேயாழ்வார் வர, மூவருமாக நின்று கொண்டனர். இவர்களோடு ஸ்ரீமந் நாராயணனே வந்து நின்று மேலும் நெருக்கத்தை உண்டுபண்ண, அந்த இருளில் இவர்கள் பகவானை தமது ஞான ஒளியினால் கண்டு மகிழ்ந்தனர்.



4. திருமழிசையாழ்வார் :

ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் சக்கர அம்சமாக திருமழிசை என்ற ஸ்தலத்தில் அவதரித்தவர். சிவ வாக்கியர் என்ற பெயரோடு சைவ சமயத்தில் இருந்தாரென்றும், பேயாழ்வாரிடத்து உபதேசம் பெற்று வைணவத்தைச் சார்ந்தார் என்றும் கூறுவர். ஒரு குகையில்



வசித்து வந்தபோது முதலாழ்வார்களைக் கண்டார் என்பர். திருச்சந்த விருத்தம் 120ம், நான்முகன் திருவந்தாதி 96ம், ஆக 216 பாசுரங்கள் பாடியுள்ளார்.

ஒரு சமயம் அத்ரி, பிருகு, வசிஷ்டர், பார்க்கவர், ஆங்கிரஸர் முதலிய தபஸ்விகள் பிரம்மாவிடம் யோகத்திலே உத்க்ருஷ்டதமமான கோவிலில் நித்ய வாசம் செய்ய விரும்புவதாகக் கூற பிரம்மா விஸ்வகர்மாவிடம் திருமழிசை க்ஷேத்திரத்தை ஒரு தட்டிலும், உலகம் அனைத்தையும் ஒரு தட்டிலும் இட்டு தராசில் எடைபோட, திருமழிசை க்ஷேத்திரம் கீழே நின்றது. தபஸ்விகள் திருமழிசை சென்று நித்யவாசம் செய்தனர். பார்க்கவர் தீர்க்க ஸத்திரம் எனும் யாகத்தால் ஸ்ரீமந் நாராயணனை தியானித்தார். அவர் பத்தினி கருவுற்று 12ம் மாதத்தில் பிரசவித்தார். அக்குழந்தையை புதரிடையே விட்டுச் சென்றனர். ஸ்ரீ ஸுதர்ஸன அம்சமான அக்குழந்தையை பூமாதேவி கடாட்சிக்க, பிண்டமாயிருந்த அது கை, கால்களுடன் உருப்பெற்று பசி தாகத்தால் அழுதது. அங்கு பிரம்பு அறுக்க வந்த திருவாளன் தன் பங்கயச் செல்வியிடம் குழந்தையைக் கொடுத்து, பால் புகட்டியபோது, அது பால் குடியாமலும், சிறு நீர் கழிக்காமலும் இருந்தது. இதை அறிந்த மக்கள் வியப்புற்றனர். ஒரு முதியவர் தன் மனைவியோடு பால் கொண்டு வந்து பருகச் சொன்னார். திருமழிசைப் பிரானும் தான் உண்ண எஞ்சிய பாலை, அவர்கள் உண்ண, தெய்வப் பேரருளால் "கணிகண்ணன்" என்ற மகன் பிறந்தான். திருச்சியில் திருமழிசைப் பிரானிடத்து கணிகண்ணன் சீடராகித் தொண்டு செய்து வந்தான். அப்போது ஒரு வயோதிக மாது கணிகண்ணனிடத்து இளமையை வரமாகக் கேட்டுப்பெற்றாள். அவளை அரசன் மணந்து கொண்டு, ஆழ்வாரைப்பற்றி அறிந்து கணிகண்ணனை அழைத்து வரச்செய்தான். அரசன் ஆழ்வாரையும் அழைத்து வரும்படி கூற, ஆழ்வார் எழுந்தருளமாட்டார் என்று கணிகண்ணன் கூறவும், கணிகண்ணனை தம்மீது பாடும்படி வற்புறுத்த, கணிகண்ணன் மறுத்துவிட்டான். அரசன் கணிகண்ணனை நாட்டைவிட்டு வெளியேறுமாறு உத்தரவிட்டான். கணிகண்ணன் திருமழிசை பிரானிடத்து கூறிவிட்டுக் கிளம்பினான்.

ஆழ்வார் ஸ்ரீ ரங்கநாதனிடம்,

"கணிகண்ணன் போகின்றான் காமரு
பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டா—
துணிவுடைய
செந்நாப்புலவனும் போகின்றேன்
நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்ச் சுருட்டிக் கொள்".

என்று பாட, பகவானும் பாம்பை எடுத்துக் கொண்டு திருமழிசை ஆழ்வாருடன் புறப்பட ஆயத்தமானார். தேவர்களும் கிளம்பினர். நகரம் களை இழந்தது. உண்மையினை உணர்ந்த அரசன் கணிகண்ணனைப் பணிந்து, மன்னிப்புக்கோர, கணிகண்ணன் திரும்பினான்.

ஆழ்வார்,

"கணிகண்ணன் போக்கொழிந்தான்
காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டும்—
துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்
கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய் படுத்துக்கொள்."

என்று பாட பகவானும் பள்ளிக் கொண்டருளினார்.

5. மதுரகவி ஆழ்வார் :

பாண்டிய நாட்டில் திருக்கோளூரில் மதுரகவி ஆழ்வார் பகவானுடைய வைநதேய அம்சமாக அவதரித்தவர். அயோத்தியில் இவருக்குத் தெரிந்த ஜோதியைப் பின்பற்றி பல ஸ்தலங்களை தரிசித்துக்கொண்டு திருக்குருகூரை (ஆழ்வார் திருநகரி) அடைந்தார். அங்கு நம்மாழ்வாரைக் கண்டு, அவரது மௌனத்தைக் கலைக்க எண்ணியவராய், "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று கேட்க, அதற்கு நம்மாழ்வார், "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்றருளினார்.

| | | |
|---|---|---|
| செத்ததின் வயிற்றில் | — | உயிரற்றதாகிய, பிரகிருதியினாலாகியஉடம்பில் |
| சிறியது | — | அணு வடிவாயுள்ள ஆன்மா |



| | | |
|---|---|---|
| பிறந்தால் | — | வந்து புகுந்தால் |
| எத்தைத் தின்று | — | எதனை அனுபவித்துக் கொண்டு |
| எங்கே | — | எவ்விடத்தில் |
| கிடக்கும் | — | இன்பம் உண்டென்று எண்ணியிருக்கும் |
| அத்தை | — | அந்த உடலின் தொடர்பினால் உண்டாகும் அவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் இவ்வைந்தினால் வரும் இன்ப துன்பங்களை, |
| தின்று | — | அனுபவித்துக் கொண்டு, |
| அங்கே | — | அவ்விடத்திலேயே |
| கிடக்கும் | — | இன்புற்றேன், இளைத்தேன் என்றுசொல்லிக் கொண்டு கிடக்கும். |

மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரை, "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்ற பாசுரத்தால் துதித்துள்ளார். இவர் 11 பாசுரங்களால் இறைவனைப் பக்தியுடன் பாடிப்பரவியவர்.

6. நம்மாழ்வார் :

பாண்டிய நாட்டில் திருக்குருகூரில் வேளாளர் குலத்தில் கலியுகம் பிறந்து 43வது நாளில் வைகாசி மாதம் பௌர்ணமியோடு கூடிய வைசாக நட்சத்திரத்தில் பிறந்தார். இவர் பகவானுடைய ஸேநாம்ச அம்சம். இவரது பெற்றோர் காரி-உடைய நங்கை தம்பதியினர். இவர்கள் வெண்பரிசாரத்திலிருந்து திருக்குருகூருக்கு வரும்போது திருக்குருங்குடி இறைவனைச் சேவித்து தங்கட்கு மகப்பேறு அருள பிரார்த்திக்க, இறைவன் நாமே உமக்குப் புத்திரராகப்



பிறப்போம் என்றருளினார். திருப்புளி ஆழ்வார் அடியில் சிறுதொட்டிலில் கிடத்தி, மாறன் என திருநாமம் சூட்டினர். குழந்தை தொட்டிலிருந்து வழுவித்தரையில்வந்தமர்ந்து பத்மாசனமிட்டு ஞான முத்திரையோடு வீற்றிருந்தது. குழந்தையான ஆழ்வார் 16 வயது வரை லௌகீகரைக் கண் திறந்து பாராது மௌனியாய் இருந்தார். மதுரகவி ஆழ்வார் தன்பால் வர அவர்பால் அருட்கண்ணோட்டம் செலுத்தி, அவர் வினாவிற்கு விடையளித்து அவரை ஆட்கொண்டார். நம்மாழ்வார் ரிக், யஜுர், அதர்வண வேதசாரத்தை திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய பிரபந்தங்களையும், சாம வேத சாரத்தை திருவாய்மொழியாகவும் அருளினார். 108 க்ஷேத்ரத்து எம்பெருமானாரும் அங்கு எழுந்தருளி மங்களாசாசனம் பெற்றனர். இவர் பகவானைக் குறித்து ஆழ்ந்த பக்தியுடன் 1296 பாசுரங்கள் இயற்றியுள்ளார்.

7. குலசேகராழ்வார் :

சேர நாட்டில் கோழிக்கோடு ராஜதானியில் த்ரடவிரதன் என்ற மன்னனுக்கு மாசி மாதம் புனர்வசு நட்சத்திரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் கௌஸ்துபாம்ச அம்சமாக அவதரித்தார். குலசேகரன் என்பதற்கு "குலத்திற்குச் சிரோபூஷணமாக உள்ளவன்" என்பது பொருள். சோழ, பாண்டியர்களை வென்று, "கொல்லிக் காவலன்", "கூடல் நாயகன்", கோழிக்கோன் குலசேகரன்" என்ற சிறப்புப் பெயர்களைப் பெற்றவர். திருமாலின் திவ்ய அவதாரங்களான இராம, கிருஷ்ணாவதாரங்களிலும், அர்ச்சாவதாரத்தில் திருவரங்கம், திருவேங்கடம் முதலிய நாதர்களிடத்தும் பக்தி பூண்டொழுகினார். இராமாயண காலட்க்ஷபம் இவர் முன் நடந்தபோது, ஸ்ரீ ராமர் கர தூஷணர்களுடன் போரிடும் கட்டம் வந்ததும், நிகழ்காலமாக எண்ணி அவர்களுக்கு உதவ படைத்திரட்டும்படி ஆணையிட்டார். குழப்ப



மடைந்த அமைச்சர், இவர் முன் வந்து இராமன் வென்றார் என்று கூறக் கேட்டு அமைதியடைந்தார். எத்துணை பிறவி பிறப்பினும் திருவேங்கடத்தே கல்லாயும், புல்லாயும் சுனையில் மீனாகவும் பிறக்க அருள் வேண்டினார். அடியார்களிடத்து மிகுந்த பக்தியுடைய இவர் பாடியது "பெருமாள் திருமொழி" எனப்படும். "பெருமாள் திருமொழி" என்பதற்குப் பெருமாளாகிய குலசேகராழ்வார் பாடிய சிறந்த வார்த்தை எனவும்,

பெருமானாகிய திருமால் மீது ஆழ்வார் அருளிய பாடல் என்றும் பொருள் கொள்வதுண்டு. இத்திருமொழி 105 பாசுரங்களை உடையது. முதல் மூன்று திருமொழியில் திருவரங்கம் பெரிய கோயிலைப்பற்றியும் நான்காம் திருமொழியில் திருவேங்கடத்தைப்பற்றியும், ஐந்தாம் திருமொழியில் விற்றுவக் கோட்டைப் பற்றியும், ஆறாம் திருமொழியில் ஆய்ச்சியர் ஊடலைப்பற்றியும், ஏழாம் திருமொழியில் தேவகியின் புலம்பலைப்பற்றியும், எட்டாம் திருமொழியில் இராமரின் தாலாட்டைப் பற்றியும், ஒன்பதாம் திருமொழியில் தசரதன் புலம்பலைப்பற்றியும், பத்தாந் திருமொழியில் இராமாயணக் கதைச் சுருக்கத்தையும் பாடியருளினார்.



8. பெரியாழ்வார் :

பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் முகுந்தர் பதுமை தம்பதியருக்கு ஸ்ரீமஹாவிஷ்ணுவின் வாகனமான கருடாழ்வார் அம்சமாக அவதரித்தவர். இவரது இயற்பெயர் விஷ்ணுசித்தர் என்பதாகும். கண்ணனுடைய பாலலீலைகளை பலவாறாக பாசுரங்களில் பாடியுள்ளார். இறைவனுக்குப் பூமாலை சூட்டி சமர்ப்பிப்பதைச் சிறந்த தொண்டாகக் கருதி நந்தவனம் அமைத்து மலர் கொய்து மாலை கட்டி வட பெருங்கோயிலுடையானுக்குச் சமர்ப்பித்து வந்தார். பாண்டிய நாட்டு ஸ்ரீ வல்லப தேவன் நகர்ச் சோதனையின்போது அரசவை புரோகிதர் செல்வ நம்பிகளிடம் "வேத முடிவான பரம்பொருளை அடையும் வழி" கேட்க, "பகவானைச் சரணடைந்தால் மறுமையில் வேண்டியது பெறலாம்" என்று புரோகிதர் பதில் கூற, அரசன் அமைதியுறாமல், பொற்குவியலை கிழிச்சீலையில் கட்டி சபை கூட்டினார். பகவான் கனவில் கூறியபடி மதுரையில் பாண்டியன் அவைக்களம் சார்ந்து, திருமாலே பரம்பொருள் என்று நிறுத்திக் கிழியை இறுத்தார் விஷ்ணுசித்தர். அனைவரும் வணங்கி அவருக்கு "பட்டர் பிரான்" என்ற சிறப்பளித்து கௌரவித்தனர். யானை மீதிருந்த ஆழ்வார் யானைக் கழுத்து மணிகளைக் கொண்டு, "திருப்பல்லாண்டு" பாடினார். "பெரியாழ்வார் திருமொழி" 473 பாசுரங்களை உடையது.

9. ஆண்டாள் :

பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வார் வடபெருங் கோயிலுடையானுக்கு அமைத்த நந்தவனத்தில் திருத்துழாய்ச் (துளசி) செடியின் கீழ் பூமிப்பிராட்டியின் அம்சமாய் அவதரித்தார். பெரியாழ்வார் அக்குழந்தைக்கு "சுரும்பார் குழற்கோதை" எனத் திருநாமம் சூட்டி வளர்த்து வந்தார். தந்தை பெரியாழ்வார் இறைவனுக்குக் கட்டி வைத்த பூமாலைகளை தனது குழலில் சூட்டிக்கொண்டு கண்ணனுக்கு உகந்த அழகு தன்னிடம் இருக்கிறதா எனக் கண்ணாடியில் தனது அழகைக் கண்டு பரவசம் அடைவாள். தினமும் இவ்வாறு மாலையைச் சூடிக்களைந்து கொண்டிருப்பதை ஒரு நாள் பட்டர் பிரான் கண்டு கோதையைக் கடிந்து கொண்டார். பின் வேறு மாலைக் கட்டிக்கொண்டுபோய் பெருமானுக்



குச் சாத்தினார். அன்றிரவு அவர் கனவில், "உமது கோதை சூடிக் கொடுத்த மாலையே நமக்கு உகந்த மாலையாகும்" என்று தெரிவிக்க ஆழ்வார் ஆனந்தமடைந்து தன்னை "ஆண்டாள்" என்றும், "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி" என்றும் கோதையைப் புகழ்ந்தார்.

கோதையும் பருவமடைந்து, ஸ்ரீ வில்லிபுத்தூரை ஆயர்பாடியாகவும், அங்குள்ள பெண்களை ஆய்ச்சியர்களாகவும் கருதினாள்.

"மற்றெவருக்கு என்னைப் பேச
வொட்டேன்
மாயிருஞ் சோலை எம் மாயிற்கல்
லால்"

என்றும்,

"மானிடர்க்கு என்று பேச்சுப்படின்
வாழகில்லேன்"

எனவும் உறுதி பூண்டு கனவிலும், நனவிலும் கண்ணனையே தன் நாதனாகக் கருதினாள். திருப்பாவை முப்பதும், திருமொழி நூற்றுநாற்பதும் ஆக 170 பாசுரங்களைப் பாடியருளினாள். அரங்கனை அடைய ஆறாக்

காதல் கொண்டாள். இதனை அரங்கன் ஆழ்வாருக்கு கனவில் தோன்றி, "நாம் கோதையை மணந்து கொள்வோம். அவளைத் திருவரங்கத்திற்கு அழைத்து வருக" என ஆணையிட்டார்.

பங்குனி உத்திரத்தன்று கோதையை ஆழ்வார் திருவரங்கன் சந்நிதிக்கு அழைத்துவர, கோதை அனைவரும் காண உள்ளே புகுந்து நாகணையினை மிதித்து ஏறித் திருவரங்கனைச் சார்ந்து ஆனந்தப் பரவசமடைந்தாள்.



10. தொண்டரடிப்பொடி ஆழ்வார் :

சோழநாட்டில் மண்டங்குடி எனும் ஊரில் வேதவிசாரதர் எனும் பார்ப்பனருக்கு மகனாக விப்ரநாராயணன் என்ற பெயரோடு பகவானுடைய வைஜயந்தி எனும் வனமாலையின் அம்சமாகத் தோன்றினார். நந்தவனம் அமைத்து, பூமாலைதொடுத்து இறைவனுக்குச் சூட்டி இறைத் தொண்டு செய்து வந்தார். உத்தமர் கோவிலில் தேவதேவர் அம்சமாகப் பிறந்த தேவதேவி எனும் தாசி, ஒரு நாள் தமது தோழியருடன் இவரது நந்தவனத்தில் இளைப்பாறினாள். அவள் இவரைக் கண்டு காதலித்து நிற்க, இவர் அவளைப்பாராது திருத் தொண்டில் ஈடுபட்டார். "இவரை நான் எவ்விதமும் அடைவேன்" என்று கூறி, காவி உடுத்தி அவரையே சரணடைந்து அவருக்கு தொண்டு செய்ய விரும்பியவள்போல் நடித்து, அவரோடு வாழ்ந்து பின் தன் இருப்பிடம் சென்றாள். இவரும் பிரிவாற்றாமையால் அவளைத் தொடர்ந்து சென்று அவள் வீட்டு வாயலில் தயங்கி நின்றார். திருமால், ஆலயத்திலுள்ள பொன்வட்டிலைத் தாசிக்கு அளித்து, அதன் மூலம் விளைந்த விளைவுகளால் இவருக்கு நற்புத்தியைப் புகட்டினார். இதன் பரிகாரமாக பாகவதர்களின் பாத தீர்த்தத்தை இவர் உட்கொண்டு பாகவத பக்தியோடு அவர்களது பாத தூளியைச் சிரமேற்கொண்டு பகவானிடத்து சரணடைந்தார். இதனால் இவருக்கு"தொண்டரடிப்பொடியாழ்வார்" என்ற நாமம் ஏற்பட்டது.

இவர் "திருமாலை" என்ற தலைப்பில் 55 பாசுரங்களை இயற்றியுள்ளார். அரங்கநாதன் மீது திருப் பள்ளியெழுச்சியும் பாடியுள்ளார்.



11. திருப்பாணாழ்வார் :

சோழவள நாட்டில் உறையூரில் கார்த்திகை மாதம் ரோஹிணி நட்சத்திரத்தன்று பகவானுடைய ஸ்ரீவத்ஸாம்சமாக நெற்பயிரிடையே அவதரித்தார். அக்குழந்தையைப்பாணர் குலத்தைச் சேர்ந்த ஒருவன் வளர்த்து வந்தான். இவர் யாழ் இசைத்துப் பாடி இறைவனை வழிபட்டு வந்தார். அரங்கனுக்கு தொண்டு செய்ய விரும்பிய இவர் ஸ்ரீரங்கத்தில் அடியெடுத்து வைக்கத் துணியாமல் காவிரியின் தென்கரையிலேயே நின்று, திசை நோக்கித் தொழுது வந்தார். இவர் ஒரு கான ஞானி. இவரைத் தீண்டத் தகாதவர் எனக் கருதி சிலர் கல்லால் எறிய நெற்றியில் குருதி பெருக ஆரம்பித்தது. இதனை வருத்தமேது மின்றி பொறுத்துக்கொண்டார். இருப்பினும் ஆழ்வாருடையபெருமையினை உணர்த்த விரும்பிய ஸ்ரீ அரங்கன் தம் நெற்றியிலிருந்து குருதி வழியச் செய்ய, இதைக்கண்ட அர்ச்சகர்கள் பயந்து அரசனுக்குத் தெரிவித்தனர். மஹாவிஷ்ணுவே லோக சாரங்கன் கனவில் தோன்றி, "நமக்கு நல்லவரான பாணிப் பெருமாளை இழிவாக நினையாமல் அவரைத் தோள்களில் எழுந்தருளப்பண்ணி வாரும்" என்று ஆணையிட, அவ்வாறே இவரைத் தோளில் சுமந்து கொண்டு அரங்கன் முன்புவிட, அனைவரும் காண திருப்பாணாழ்வார், "அமலன் ஆதிபிரான்" எனும் பாசுரம் பாடி அரங்கனுடன் ஐக்கியமானார். இவர் பகவானைக் குறித்து பக்தியுடன் 10 பாசுரங்கள் பாடித் துதித்தருளினார்.

12. திருமங்கை ஆழ்வார் :

பகவானுடைய சாரங்க அம்சமாய் நள வருஷம் கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தன்று திருவாலியெனும் திவ்ய தேசத்திற்கு அடுத்த திருக்குறையலூரில் நீலன் எனும் குறுநில மன்னனுக்கு மகனாக திருமங்கை ஆழ்வார் அவதாரம் செய்தார். இவருக்கு பரகாலன், கலியன் எனும் பெயர்களும் உண்டு. கள்ளர் தலைவனாகிய நீலன், தன்

(43-ஆம் பக்கம் பார்க்க)

# வள்ளலார் கண்ட இராமநாமப் பெருமை

"காராய வண்ண மணிவண்ண
கண்ண
கனசங்கு சக்ர தரநீள்
சீராய தூய மலர்வாய நேய
ஸ்ரீ ராம ராம வெனவே
தாராய வாழ்வு தருநெஞ்சு சூழ்க
தாமோத ராய நமவோம்
நாராய ணாய நமவாம னாய
நமகேச வாய நமவே"

என வரும் எழுசீரடி ஆசிரிய விருத்தத்தினைப் பாடியருளியவர் யார் என எவரும் கேட்கத் துணியலாம். ஸ்ரீ வைஷ்ணவ பரம்பரையில் வந்த வைணவப் பெரியார் ஒருவர் இதனைப் பாடியிருப்பாரோ என்றும் நினைக்கத் தோன்றலாம். ஆனால், இந்த அருமையான பாசுரத்தைப் பாடியவர் வடலூர் வள்ளற் பெருமானேயாவர். 'திருச்சிற்றம்பலம்' என்று எழுதிவிட்டுத்தான் இந்தப் பாட்டினையும் அவர் திருக்கரம் எழுதி உள்ளது. இதனை நினைக்கையில் இளம்பருவத்தில் வள்ளலார் இந்து மதத்தினைப் பொறுத்தவரையில் எத்தகைய மனப்பாங்குகொண்டிருந்தார் என்பதனை உணரலாம்.

---

திருமதி. கே. தேவகி பிரகாசம்,
திருப்பதி.

---

தமிழ் நாடெங்கும் வள்ளலார் காலத்தில் இராமாயணம் பெரிய புராணம் திருவிளையாடற் புராணம் கந்த புராணம் முதலியவைபற்றிச் சொற்பொழிவுகளைத் தமையனார் நிகழ்த்துகையில் அவருக்கு உதவியாக வள்ளலார் கையேடு வாசிக்கும் பணி புரிந்துள்ளார்; மிக நேர்த்தியாக நுண் பொருள் புலப்பட இவரே பல முறை சொற்பொழிவுகளும் நிகழ்த்தியுள்ளார். அதற்கேற்பப் பல சமய நூல்களைப் பயிலவும் பிறர் சொற்பொழிவுகளைக் கேட்கவும் வள்ளலாருக்கு வாய்ப்பு நேர்ந்ததில் வியப்பில்லை. இவ்வாறான அனுபவம் இவரது அடிமனத்தில் இருந்த காரணத்தால் இளம் பருவத்தில் பல்வேறு கடவுளர்களைப் பாட மனம் ஒருப்பட்டது. சமயங்களினூடே ஒரு சமரச உணர்வும் இவரிடம் தலைகாட்டியது. அந்நிலையில் ஆர்வமுடன் பாடியருளிய பதிகமே ஸ்ரீ ராமநாமத் திருப்பதிகம் ஆகும்.

முதற் பாசுரத்தில் திரேதாயுகத்து இராமனை வழிபடுகையில் துவாபர யுகத்துக் கண்ணனாகிய தாமோதரனையும், கிருதயுகத்து வாமனனையும், பன்னிரு மாதங்களுடன் சார்த்திக் கூறப்பெறும் திருமாலின் பன்னிரு திருநாமங்களுள் மார்கழிச் சிறப்புத் திருப்பெயரான கேசவனையும் கூறுகிறார். இதனால், பல்லூழி முதல்வனாகத் திருமாலைக் கருதும் பாங்கும், வைணவ வழிபாட்டுச் சமய மரபும் வள்ளற் பெருமானால் புலப்படுவதைக் கண்டு போற்றலாம்.

இராமநாம மாட்சி :

கம்பர் இராமாயணம் பாடுகையில் ஆங்காங்கும் இராமனது பெருமையையும் இராமநாமத்தின் பெருமையையும் புலப்படுத்திகொண்டே செல்கிறார். அவருக்கு முன்னோடியாக ஆழ்வார்களுள் சிறப்பாகக் குலசேகர ஆழ்வார் இராமாவதாரத்திலும், திருமங்கையாழ்வார் திருமாலின் ராமப் பெருமையிலும் சிறப்புடன் ஈடுபாடு கொண்டு பாடியுள்ளார்கள். சான்றாகத் திருமங்கையாழ்வார்,

" வாடினேன் வாடி வருந்தினேன்
மனத்தால்
பெருந்துயரிடும்பையிற் பிறந்து
கூடினேன் கூடி யிளையவர் தம்மோ
டவர்தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளா
லுணர் வெனும் பெரும்பதம்
தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு
கொண்டேன்
நாராயணா வெனும் நாமம்"
—பெரிய திருமொழி-1ஆம்
திருமொழி.

என வரும் பாசுரத்தைக் காணலாம். திருமாலின் 8 எழுத்திற்கு (அஷ்டாட்சரத்திற்கு) ஈடான சிறப்பு இராம நாமத்திற்கு உண்டு என்பதை வைணவச் சான்றோர்கள் பலரும் விளம்பியுள்ளனர். வைணவ மரபில் திருமால் கட்டிப் பொன் எனின், அவரது திரு நாமம் பணிப் பொன் (அணிகலன் போல அணிவோர்க்குப் பயன்படுவது என்பது குறிப்பு) என்று போற்றியுரைப்பர். இக்கருத்திற்கு அரண் சேர்க்கும் வகையில் இராமனோ இலங்கை செல்லச் சேது பந்தனம் அமைக்க வேண்டிய நிலையிலிருந்தான்; ஆனால், அவன் தூதுவனாகிய அநுமன் பக்தியுடன் இராமநாமத்தைக் கூறியபடி அதன் ஆற்றலால் கடலைத்தாண்டி இலங்கை அடைந்தனன் என்றும் கூறுவர்.

ஆதிகவி வான்மீகி வாழ்க்கையில் உயர்ந்த திருப்பத்தினைத் தந்ததே 'ராம' நாமமாகும். அவர் இராம நாமத்தில் சொக்கித் திளைத்தவர்; கம்பரும் இராமநாமத்தில், அவ்வாறே தம் வயமிழந்தவர். அவர் பாடியுள்ள சிறப்பான படலங்களுள் ஒன்றான 'வாலிவதைப் படலத்தில்' வாலியின் மார்பில் தைத்து உள்ள அம்பினைப் பிடுங்கிப் பார்க்கையில் வாலி இராம நாமத்தினைக் கண்டான் என்கிறார். இச்சந்தர்ப்பத்தினை வாய்ப்பாகக் கொண்டு ராமநாமப் பெருமையைக் கூற முற்பட்டு விடுகிறார் கம்பர். இதனை,

"மும்மைசா லுலகுக் கெல்லாம்
மூல மந்திரத்தை முற்றுந்
தம்மையே தமர்க்கு நல்குந்
தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே யெழுமை ரோய்க்கு
மருந்தினை இராம னென்னும்
செம்மைசேர் நாமந் தன்னைக்
கண்களிற் றெரியக் கண்டான்"

எனப்பாடிச் செல்வதால் அறியலாம். இவ்வாறான கருத்துக்கள் எல்லாம் வள்ளற்பெருமான் அடிமனத்திலிருந்து கொண்டு பரந்தவுள்ளத்துடன் கூடிய ஆன்மீகச் சிந்தனையை முடுக்கிவிட்டிருக்கலாம். எவ்வாறோ ஆர்வமாகச் சமரச சமயமனப்பான்மையுடன் ஸ்ரீராம நாமத்தின் பெருமை புலப்பட ஒரு பதிகமே பாடிவிடுகிறார் வள்ளலார்.

பக்திப்பாநலம் :

ஸ்ரீ ராமநாமத் திருப்பதிகம் பதினொரு விருத்தங்களால் ஆகியது. முதல் விருத்தம் எழு சீரடி ஆசிரிய விருத்தமாகவும், பிற விருத்தங்கள் எண் சீரடி ஆசிரிய விருத்தமாகவும் அமைந்துள்ளன; அனைத்தும் இசை நலத்துடன் பாடிப் பரவுதற்கேற்றவை.

முதல் விருத்தத்துள் பூர்ண அவதாரங்களாகிய கண்ணனையும் இராமனையும் குறிப்பிட்டுவிட்டு, அனைத்து அவதாரங்களுக்கும் காரணனான நாராயணனைச் சிங்க நோக்காக அமைக்கிறார்; பிறகு வாமன அவதாரத்தையும் கேசவனையும் கூறி வணக்கஞ் செலுத்துகிறார்.

வைணவ மரபில் பிரமசாரி நாராயணனுக்கு அவ்வளவு தனிப்பெருமையில்லை. திருமகளுடன் கூடிய நாராயணனாகிய இலட்சுமி நாராயணனுக்குத்தான் பெருமை மிகுதியாகும். இதனையுணர்ந்து அவ்வாறே பாடும் வள்ளலார் திருமாலைப் பலவாறாகப் போற்றுகிறார். இம்மையும் மறுமையுமாகிய தம் இருமைக்கும் புனையாக மனத்தமர்ந்த 'இராமநாமத் தென்னரசே யென்னமுதே என் தாயே' என்று உருகி நிற்கிறார். தம் மனந்தளராமல் இருக்க இறைவனை அருள் புரியுமாறு வேண்டுகிறார். இவ்வாறான கருத்துக்களின் ஊற்றத்தினைத்,

"திருமகளெம் பெருமாட்டி மகிழும் வண்ணச்
செழுங்கனியே கொழும்பாகே தேனே தெய்வத்
தருமகனைக் காத்தருளக் கரத்தே வென்றித்
தனு வெடுத்த வொரு முதலே தருமப்பேறே
இருமையு மென் னுளத்தமர்ந்த ராமநாமத்
தென்னரசே என்னமுதே என் தாயே நின்
மருமலர்ப் பொன் னடிவழுத்துஞ் சிறியேன் அந்தோ
மனந்தளர்ந்தேன் அறிந்தும் அருள்வழங்கிலாயே"

என வரும் பாசுரத்தால் அறிந்தின்புறலாம்.

சக்கரவர்த்தி திருமகனாகிய இராமனுடைய வரலாறு தெரிவிக்கும் முறையில் 'தசரதன்றன் குலமணியே' என்றும் 'தெவ்வினையார் அரக்கர் குலஞ் செற்ற வெற்றிச் சிங்கமே' என்றும் குறிப்பிடுகிறார். சேதுபந்தனங்கட்டி இலங்கை சென்று கொடிய இராவணனை அம்பினால் பணிகொண்ட இராமன் திறனைக் கூறி அடைக்கலம் வேண்டுகிறார்.

"நெடுங் கடலுக் கணையளித்த நிலையே வெய்ய
மறம்பழுக்கும் இலங்கை இராவணனைப் பண்டோர்
வாளியினால் பணிகொண்ட மணியே வாய்மைத்
திறம் பழுக்கும் ஸ்ரீராம வள்ளலே நின்
திருவருளே யன்றி மற்றோர் செயலிலேனே"

வைணவ மரபில்ஞானம் (பேரறிவு), சௌந்தரியம் (பேரழகு), சுவாமித்துவம் (உடையனாந்தன்மை), சௌலப்யம் (எளியனாந்தன்மை), வாத்சல்யம் (அடியாரிடங்காட்டும் கருணை), சௌசீல்யம் (அழுக்கு நீக்கிப் போற்றுதல்) முதலிய கலியாண குணங்கள் திருமாலைச் சார்த்தி உரைக்கப்படும். இதனை நன்குணர்ந்த வள்ளற் பெருமான் கரிய திருமேனியுடைய இராமனையும் அவனையொத்த கண்ணனையும் நினைந்த வண்ணம் பலபடப் போற்றியுரைக்கின்றார். சான்றாக,

"வான் வண்ணக் கருமுகிலே மழையே நீல
மணிவண்ணக் கொழுஞ்சுடரே மருந்தே வானத்
தேன் வண்ணச் செழுஞ்சுவையே ராமநாமத்
தெய்வமே"

என்றும்,

"ஆருயிருக் கொருதுணையேயரசே பூவை
நிறம் பழுக்க அழகொழுகும் வடிவக்குன்றே"

என்றும்,

"கலைக் கடலே கருணை நெடுங்கடலே
........"

என்றும் வரும் பாசுரப் பகுதிகளைக் காணலாம். 'அறம் பழுக்குந்தருவே' 'என் குருவே' என்று பாராட்டுகின்ற குறிப்புக்களும் உண்டு. வள்ளலார் சோதி வழிபாடு உடையவராதலின் இராமனை ஞான ஒளி நாயகனாகக் கொண்டு,

"ஞான
மலைக் கணெழுஞ் சுடரேவான் சுடரேயன்பர்
மனத்தொளிருஞ் சுயஞ்சுடரே மணியே வானோர்
தலைக்கணுறு மகுடசிகாமணியே
........"

என்மறெல்லாம் பாடிச் செல்கிறார் வள்ளலார்.

குற்ற நெஞ்சமுடையவர்களைச் சார்ந்து அலுத்துப் போன பொய்யனாகிய தம்மையும் ஒரு காலத்தில் ஆட்கொண்ட பெருமைக்குரியவர் சத்தியத்தின் திருவுருவமாகிய இராமபிரான். அவர் தம்மை வெறுத்திடாமலும் புறம் போக்கிவிடாமலும் அடைக்கலமாகக் காத்தருள வேண்டுமென்று மன்றாடுகிறார் வள்ளலார்.

"மையான நெஞ்சகத்தோர் வாயில்
சார்ந்தே
மனந் தளர்ந்தேன் வருந்துகின்ற
வருத்தமெல்லாம்
ஐயா வென் உளத்தமர்ந்தாய்
நீதான் சற்றும்
அறியாயோ ? அறியாயேல்
அறிவார் யாரே ?
பொய்யான தன்மையினேன்
எனினும் என்னை
புறம் விடுத்தல் அழகேயோ ?
பொருளோ வெண்ணி
மெய்யா என் றனையந்நாள் ஆண்
டாய் ! இந்நாள்
வெறுத்தனையேல் எங்கே யான்
மேவுவேனே ?"

இவ்வாறாகத் தம் மனத்தில் இடங்கொண்ட கருணையங் கடலாகிய இராமன் தம்மை வன்னெஞ்சார்களுடன் சேர்க்கவிடாமல் இரங்கி அடைக்கலமாகக் கொண்டு அருள் புரியுமாறு வேண்டுகிறார். தம்மைத் துன்பக் கடலினின்றும் எடுத்துக் காப்பாற்றவில்லையெனின் பழி இறைவன்பால் சேருமென்றும் குற்றஞ் சாட்டுகிறார். இதனைக்,

"கல்லாய வன் மனத்தர் தம்பாற்
சென்றே
கண்கலக்கங் கொள்கின்றேன்
கவலை வாழ்வை
எல்லா முன் னிருந்தா யன்றோ
சற்றும்
இரங்கிலையெம் பெருமானே
யென்னே ! யென்னே !
பொல்லாத வெவ்வினையேன்
எனினும் என்னைப்
புண்ணியனே புரப்பதருட் புகழ்ச்சி
யன்றோ !
அல்லார்ந்த துயர்க்கடலின் றெடுத்தி
டாயேல்
ஆற்றேன் நான் பழி நின்பால்
ஆக்குவேனே !"

என வரும் பாசுரத்தால் அறியலாம். இப்படி இறைவனையே ஒரு வகையில் குற்றஞ்சாட்டிப் பேசும் போக்கினை மணிவாசகரிடமிருந்து இவர் கற்றுக்கொண்டாரோ என்று நினைக்கத் தோன்றும். அஃதாவது, திருவாசகத்தில்,

"கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடி லாதாய் பழி கொண்டாய்
படுவேன் படுவ தெல்லாம் நான்
பட்டாற் பின்னைப் பயனென்னே?
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளுங் குரு
மணியே !
நடுவாய் நில்லா தொழிந்தக் கால்
நன்றோ எங்கள் நாயகமே ?

—ஆனந்தமாலை 4

எனவரும் பாடல் வள்ளலாரை இவ்வாறு பாடவைத்திருக்குமோ என்று சிந்திப்பதில் தவறில்லை.

ஆக, இராம அவதாரம் வள்ளலார் வாழ்வியலில் எவ்வாறோ சிந்தித்துப் பார்க்கிற அளவில் ஒருவகைச் சமரச நோக்கமாகப் பங்கு கொண்டுள்ளமை நினைவிற்கொள்ளத் தக்கதாகும். இந்தப் பதிகத்துள் சிறந்த செய்யுளுக்கு வேண்டிய மதிநலம் (Intellectual element), கற்பனை நலம் (Imagi nature element) உணர்ச்சி நலம் (Emotional element), யாப்பு நலம்(Technical element) ஆகியவை நன்கு பொருந்தி உள்ளன எனலாம்.

எனவே, உலகப் பெருங்கவிஞர்களுக்கு இயல்பாக அமைய வேண்டிய கவிதைத் தகுதிகள் அனைத்தும் அருட்பிரகாச வள்ளற்பெருமானிடம் நன்கு பொருந்தியுள்ளமை போற்றற்குரியது எனலாம்.

★


முக்தேஸ்வரர் கோயில் - புவனேஸ்வர்



(20-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பிறரைத் தூற்றுவார்கள். மேன்மக்களோ தியானத்தின் அபரிமிதமான ஆற்றலைப்பெற்று விளங்குவர் என்ற கூற்றில், நம்மால் விலக்கப்பட வேண்டிய இழிந்த தன்மைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

'நான் மட்டும் நன்றாக வாழ்ந்தால் போதும். அந்த மட்டுக்கும்தான் என் கவலையெல்லாம்! பிறர் எக்கேடு கெட்டால் எனக்கென்ன? அவர் யாரோ, நான் யாரோ' என்ற குறுகிய சுயநலத்துக்கு உபநிடதங்களில் எள்ளளவும் இடமில்லை.

யஸ்து ஸர்வாணி பூதானி
ஆத்மன் யேவ அனுபஸ்யதி
ஸர்வபூதேஷு சாத்மானம் ததோ ந
விஜுகுப்ஸதே |
யஸ்மின் ஸர்வாணி பூதானி
ஆத்மை வாபூத் விஜானத: |
தத்ர கோ மோஹ: க: சோக:
ஏகத்வம் அனுபஸ்யத: |

என்ற உபநிடதப் பகுதியின் பொழிப்புரையை,

உய்வதனைத்திலும் ஒன்றாய் எங்கும்
ஒரு பொருளானது தெய்வம்
உள்ளதெலாம் ஓர் உயிர் என்று
தேர்ந்தபின்
உள்ளங் குலைவதுண்டோ—மனமே
வெள்ளமெனப் பொழி தண்ணருள்
ஆழ்ந்தபின்
வேதனையுண்டோடா?

என்று பாரதியின் குரலாகக் கேட்கிறோம்.

ப்ருஹதாரண்யத்தில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி சொல்லப்பட்டிருக்கிறது.

தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் ஆகிய மூன்று வகையினரும் பிரஜாபதியிடம் உபதேசம் வேண்டினார்கள். அவர் 'த' என்ற ஓர் எழுத்தை உபதேசித்தார். மூவரும், முறையே, தமம், தானம், தயை என்று பொருள் கொண்டார்கள். இம்மூன்று வகைப்பட்டவர்களின் இயல்புகள் மனித குலத்திலே இருப்பதால் புலனடக்கம், கொடை, இரக்கம் ஆகியன மனிதர்க்கே வேண்டப்பட்டன என்று கொள்ள வேண்டும். ஆம், ஈத்துவக்கும் இன்பம் மனிதப்பிறவியினர்க்கே உரிய வரப்பிரசாதம் அல்லவா?

மனிதன் தோன்றிய நாளிலிருந்தே அச்சங்களிடையேதான் வாழ்ந்து வந்திருக்கிறான். முதுமையை எண்ணி அச்சம், மரணத்தை நினைத்துஅச்சம் என்றிம்மாதிரியான அச்சங்கள் மனிதனோடு ஒட்டிக் கொண்டிருக்கின்றன.

அச்சங்களின் நிழலே படாத முற்றிலும் இன்பமே நிறைந்த ஒரு பிரதேசத்தை மிகுந்த ஆசையோடு அவன் கனவு கண்டு கொண்டே இருந்து வருகிறான்.

மண்ணுலகில், அத்தகைய தெவிட்டாத இன்பச்சுவை கொண்ட பகுதி ஓர் ஊசிமுனையளவுக்குக் கூடக் காணோம்.

மனிதகுலத்தின் தணியாதவேட்கை கடோபநிஷத்தில், காலதேவனோடு பேசிய நசிகேதன் வாயிலிருந்து வெளியாகிறது.

ஸ்வர்கே லோகே ந பயம் கிஞ்சநாஸ்தி
ந தத்ர த்வம் ந ஜரயா பிபேதி |
உபே தீர்த்வாசனாயிபாஸே
சோகாதிகோ மோததே
ஸ்வர்கலோகே ||
(காடகம்: 12)

மனிதத்வ நிலை நீங்கி தேவத்வம் அடையப்பெற்று, ஸ்வர்கத்துக்குச் சென்றால், அங்கே பயம் இல்லை; முதுமை இல்லை. ஏன், மரணமே இல்லை! பசி தாகம் இல்லை. சோகங்களைக் கடந்து, ஆனந்தக் கடலில் மிதக்கலாம் என்ற வரிகளில், மனித சமுதாயத்தின் லட்சியங்கள் பிரதிபலிக்கின்றன.

இவ்வுலகமும் அதனிலுள்ள பொருட்களும் இறைவனால் படைக்கப்பட்டவை. அனைவரும் தத்தமக்குரிய பங்கினைப் பெற்றுத் துய்த்திடலாம்தான். ஆனால் போட்டி, பொறாமைகள், திருட்டு எண்ணங்கள், வெறுப்புக்கள், வேதனைகள் சில மனிதர்களின் இதயத்தைச் சூழ்ந்துகொண்டு, தவறான செயல்களில் ஈடுபடுத்துகின்றன. இந்தக் குறைபாட்டை எடுத்துக் கூறி நம்மை எச்சரிக்கிறது ஈசாவாஸ்யோபநிடதம்.

ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச
ஜகத்யாம் ஜகத் |
தேன த்யக்தேன புஞ்ஜீதா மா
க்ருத கஸ்ய ஸ்வித் தனம் ||
(ஈ.ச.: 1)

'ஏ! மனிதனே! நீ நன்றாக அனுபவி. பிறரிடம் ஏராளமான பொருள் இருப்பதைக் கண்டு பொறாமைப் படாதே. மற்றவர் பொருளை அபகரிக்க எண்ணாதே' என்பது உபநிடத அறிவுரை.

ஆக, மனிதனின் இயற்கையான இயல்புகளாக நல்லறிவு, இனிய பேச்சு, உயர் சிந்தனை, புலனடக்கம், தவம், சுயநலமற்றதொண்டு, மேலோரிடம் பணிவு, சத்தியத்தில் உறுதி, ஈகை, திருடாமை, எல்லா உயிர்களையும் தன்னைப்போலவே கருதி நேசித்தல், மண்ணில் காலூன்றியிருந்தாலும் விண்ணளாவிய லட்சியம் போன்றவைகளை உபநிடதங்கள் தெள்ளத்தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. ★



# திருமங்கை ஆழ்வார் காலநிலை – ஒரு மறுப்புரை

1990 நவம்பர் மாதம் 'ஸப்தகிரி' இதழில் பழமார்னேரி திரு. பி. சுந்தரராமன் அவர்களின் 'திருப்பணித் திருடர் திருமங்கை மன்னன்' என்கிற தலைப்பில் வெளி வந்துள்ள கட்டுரை பொதுவாக நன்கு அமைந்திருந்த போதிலும், அவர் அவ்வாழ்வாரின் காலத்தை கி. பி. 11ம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கூறியிருப்பது கால ஆராய்ச்சிக்கு ஒவ்வாதது ஆகும். அவருடைய கூற்று தமிழ் அறிஞர்களின் முடிவான கருத்துக்களுக்கு முரணானது. அதை தெளிவுபடுத்தவே அடியேன் இக் கட்டுரையை வரைய வேண்டியுள்ளது.

1990ம் வருடம் ஏப்ரல் மாதம் 'ஸப்தகிரி', இதழில் வெளியான அடியேனது 'கம்பர் கண்ட ஆழ்வார்கள்' என்கிற கட்டுரையை நோக்கின், ஆழ்வார்கள் அனைவரும் குறிப்பாக திருமங்கையாழ்வாரும் கம்பன் காலத்திற்கு முற்பட்டவர்கள் என்பது கையிலங்கு நெல்லிக் கனியாகும். இவ்வுண்மையை கம்பன் காலத்தை 12ம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 13ம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும் என்று தவறாக நிர்ணயித்த பேராசிரியர் திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களும் தம் 'கம்பன் காவியம்' என்கிற நூலில், 156 முதல் 161 வரை பக்கங்களில் காணக் கிடைக்கும் ஆங்கில கட்டுரையான கம்பன் கால நிலை ஒரு எதிர்ப்புரை (The Age of Kamban-A. Rejoinder) என்ற மகுடம் இடப்பட்டுள்ள கட்டுரையில் ஏற்று கொண்டுள்ளார். மாறாக கம்பன் ஆழ்வார்களுக்கும் முற்பட்டவராக இருக்கலாம். என்று தூத்துக்குடி வழக்குறைஞரான திரு. ஏ. சி. பால் நாடாரின் கூற்றை திரு. எஸ். வையாபுரி பிள்ளை மறுத்திருக்கிறார். ஏன் எனில் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் இவர்களை அடியொற்றி அவர்களின் சொற்பொருட்களைக் கம்பன் பெரிதும் தம் 'இராமாவதாரம்' என்கிற நூலில் கையாண்டுள்ளார். ஆகவே திருமங்கையாழ்வார் கம்பனின் காலத்திற்கும் முற்பட்டவர் என்பதை இல்லை செய்வதற்கில்லை.

மேலும் கம்பனின் கால நிலையை நிர்ணயித்த பேராசிரியர் எஸ். வையாபுரி பிள்ளை அவர்களின் கூற்று தமிழறிஞர்கள் பலரால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. சென்னைக் கம்பன் கழகம் 1975 ஆகஸ்ட் 9, 10, 11 தேதிகளில் நிகழ்ந்த முதற் கம்பன் விழாவில் வெளியிட்ட 'கம்பன் விழா மலரில்' திரு. எம். அருணாசலம் அவர்கள் ஆங்கிலத்தில் வரைந்துள்ள 'கம்பனின் காலம்' (The Date of Kamban) என்கிற 10வது கட்டுரையில் பல ஆதாரங்களை எடுத்து காண்பித்து அவரது காலம் கி. பி. 9ம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும் என்று ஐயம் திரிபுஅற நிலை நிறுத்தியுள்ளார். இதுவேதான் பல தமிழ்ச் சான்றோர்களின் முடிந்த முடிபும் ஆகும்.

மேலும் பேராசிரியர் மு. இராக. வைய்யங்கார் அவர்கள் இயற்றியுள்ள 'ஆழ்வார்கள் கால நிலை' என்கிற ஆராய்ச்சி நூலில் பல காரணங்களை அடிப்படையாக கொண்டு திருமங்கையாழ்வாரும், திருஞான சம்பந்தரும் சம காலத்தவர் என்றும் திருஞான சம்பந்தர் வாழ்ந்த காலம் கி. பி. 7ம் நூற்றாண்டு என்பது முடிந்த கொள்கை என்றும் முழங்கியுள்ளார். எனவே திருமங்கையாழ்வாரும் 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியை சேர்ந்தவர் என்று அவர் கருதுவதில் தவறில்லை.

தவிர கம்பரும் ஸ்ரீவைஷ்ணவ ஆச்சாரியரான ஸ்ரீமந் நாதமுனிகளும் சம காலத்தவர் என்றும் அப்போது ஆண்ட சோழ அரசன் கம்ப இராமாயணத்தை தன் அரசவையில் அரங்கேற்றம் செய்ய இசையாததால் கம்பர் ஸ்ரீரங்கம் ஸ்ரீ ரங்கநாதர் ஆலயத்தில் மேட்டழகிய சிங்கர் சன்னதிக்கு முன்பாக தன் காவியத்தை ஸ்ரீமந் நாதமுனிகளின் அருளுடன் அவர் தலைமையில் வைணவப் பெரு மக்களின் மத்தியில் அரங்கேற்றினார் என்பது வரலாற்று நூல்கள் மூலம் அறியக் கிடக்கின்றது.

ஸ்ரீமந் நாதமுனிகளின் காலம் 9ஆம் நூற்றாண்டாகும் என்பது அனைவராலும் ஒப்ப முடிந்த முடிவாகும். திருச்சிராபள்ளி புத்தூரில் வாழ்ந்து வருகிற இருமொழிப் புலவர் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீமான். எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் வெளியிட்டுள்ள 'பாரதீய பூர்வ சிகா ஸ்ரீவைஷ்ணவ சபா'வின் பொன் விழா மலரில் ஸ்ரீமந் நாதமுனிகள் வாழ்ந்த காலத்தை கி. பி. 823 முதல் 917 வரை என்று குறிப்பிட்டுள்ளார். ஆகவே நாதமுனிகளால் தேடி எடுத்து தொகுக்கப்பட்ட 'நாலாயிர திவ்ய பிரபந்தம்' 9ஆம் நூற்றாண்டுக்கும் முன்பாகவே வழக்கில் நெடுங்காலமிருந்து பின் வழக்கொழிந்து இருந்தன என்பது பெறப்படும். அவைகளை மறுபடியும் உத்தாரணம் செய்யப்பட்டதை ஸ்ரீமந் நாதமுனிகளின் சரித்திரத்திலிருந்து அறியலாம். இச்சான்றுகள் காரணமாக ஆழ்வார்கள் அனைவரும் 9ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர்கள் என்பதில் யாதொரு கருத்து வேறுபாடும் இருக்க நியாயமில்லை.

**திரு. கே. வரததேசிகன்-விழுப்புரம்.**

எனவே திரு. பி. சுந்தரராமன் அவர்கள் திருமங்கையாழ்வார் கி. பி. 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என்று துணிந்திருப்பது கால ஆராய்ச்சிக்கு உகந்ததல்ல. அந்த முடிவுக்கு அவர் கூறியுள்ள காரணங்களும் ஏற்கத்தக்கவையல்ல. "அப்பர் சம்பந்தரைச் சந்தித்த போது வயது முதிர்ந்தவராயிருந்தார் என்றும் அவர் தன் 81ம் வயதில் சிவபதம் அடைந்தனர் என்றும் சொல்லப்படுகின்றன. 7ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் அப்பர் அவதரித்தாக கொண்டால் அவரது வாழ் நாள் கி. பி. 600 முதல் 681 வரை என்று நிர்ணயிக்கலாம். அவ்விதமே திரு. மு. இராகவ அய்யங்காரும் தம் ஆராய்ச்சி நூலில் குறிப்பிட்டுள்ளார். அப்பரைவிட வயதில் இளைஞரான சம்பந்தர் 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கியவர் என்பது தெளிவாகும். ஆகவே முற்கூறிய காரணங்களுக்காக திருமங்கையாழ்வாரும் சம்பந்தரின் சம காலத்தவரே ஆவார். ஆனபடியால் திருமங்கை ஆழ்வாரும் 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவர் என்பதே கால ஆராய்ச்சிக்கு சாலப் பொருந்தும்.

★

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

சமேதனாக வானிலே தோன்றினான். இவன்மேல் உள்ள பிரேமத்தின் கனத்தால், அவன் செல்வம் வல்லமை சக்தி ஆகியவற்றையும் மறந்து, அவனுக்கு என்ன தீங்கு நேரிடுமோவென அச்சங்கொண்டு,

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்
தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணி
வண்ணா! உன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு"

(திருப்பல்லாண்டு-1)

என காப்பிட்டுப் பல்லாண்டு பாடி மகிழ்கிறார்.

வில் விழாவிற்கென அழைக்கப் பெற்று கிருஷ்ணனும் பலராமனும் வடமதுரையை அடைந்தார்கள். கம்சனுக்குச் சந்தனம் கொண்டு செல்லும் கூனியைச் சந்தித்தார்கள். தனக்கும் தன் அண்ணனுக்கும் பூசிக்கொள்ளலாம்படியான சந்தனம் கொடு எனக் கிருஷ்ணன் கேட்டான். அவளும் ஒன்றைக் கொடுக்க இது செலவுக்குத்தக்கது, தரமான ஒன்றைக் கொடு என்று கேட்டான். அவளும் வேறொன்றைக் காண்பிக்க, 'இது கம்சனுக்கே உரியது' என அதனையும் மறுத்தான். இன்னொன்றைக் காண்பிக்க இதில் நிறம் ஒன்றே ஏற்கக் கூடியது. ஆகவே உபயோகிப்பாரின் உடல்வாகு அறிந்து தரமான சந்தனம் கொடு என்றான். வெண்ணெய் முடை நாற்றமேயுடைய ஆய்ப்பாடியிலே வளர்ந்த இப்பிள்ளைகள் சந்தனத்தின் வாசி அறிந்தபடி என்னே! என வியந்து தரமான சந்தனத்தைத் தானே பூசியும் விட்டாள். "மார்பாரப்புல்கி நீயுண்டுமிழ்ந்த பூமி" (பெரிய திருவந். 16) எனப் பிரளயத்திலே அழியவிருந்த இப்பூமியை விழுங்கிப் பின் வெளிவிட்டதும் இவன் தானே? கடலுக் கடியில் கிடந்து பாசி படர்ந்து அழுக்

# வெற்றியின் இரகசியம்

பாரதப் போரில் அன்று அர்ஜுனன் அனுபவித்த சோதனைகளையும் வேதனைகளையும்நாமும் நமது வாழ்வில் இடையறாது அனுபவித்து வருகிறோம். கண்ணன் கூறிய கீதை என்னும் போதனை காண்டீபனுக்கு மட்டும் உரியது அல்ல. நமக்கும் உரியதே. வாழ்க்கை என்னும் போராட்டத்தில் நாம் படும் துன்பங்களையும் தோல்விகளையும் களைந்திட கீதை நமக்கு பாதை கூறுகிறது. பாரதப் போரில் அர்ஜுனன் கண்ணனை சாரதியாகத் துணை கொண்டான். அர்ஜுனன் நரனாகவும் கண்ணன் நாராயணனாகவும் நின்று கூட்டணி கண்டார்கள். இந்த நர-நாராயண கூட்டணியே அங்கு வெற்றிக்கு வித்திட்டது. நமக்கு இது ஒரு படிப்பினை. ஒரு ஒளி விளக்கு.

வாழ்வில் வெற்றி காண நமக்கும் கூட்டணி தேவை. அதுவும் நர-நாராயண கூட்டணியே தேவை. எனவே நாம் கண்ணனை சாரதியாக, நண்பனாக, நல்லாசிரியனாக உள்ளத்தில் நிலை நாட்டுவோம். வெற்றிக்கு இது ஒன்றே வழி ஒப்பற்ற வழியும் இதுவேயாகும்.

சஞ்ஜயன் என்பவன் திரிதராஷ்டிர மன்னனின் மந்திரி. ஸ்ரீவியாச மகரிஷியின் பூரண அருளும் ஆசியும் பெற்றவன். ஸ்ரீவியாசரிடம் வரம் பெற்று குருக்ஷேத்திரத்தில் நிகழ்ந்த பாரதப் போரை கண்ணால் காணும் வல்லமையும் வாய்ப்பையும் சஞ்ஜயன் பெற்றான்.

போர்களம் சென்று அங்கு தங்கியிருந்து போர் நிகழ்ச்சிகள் அனைத்தும் கண்டு, பீஷ்மர் வீழ்ச்சி அடைந்த பிறகு சஞ்ஜயன் நாடு திரும்பினான். போர் நிகழ்ச்சிகளையும் உரையாடல்களையும் அவன் திருதராஷ்டிர மன்னனுக்கு எழுத்துவிடாமல் எடுத்துரைத்தான். மன்னனுக்கு அவன் பேச்சு, திரை அரங்கில் காணும் காட்சியாய் இருந்தது. அன்று அவன் அளித்த அவ்வுரையாடல்கள் ஸ்ரீமத் பகவத் கீதை என்னும் உயர் நூலாக மலர்ந்தது. பாரெங்கும் மணம் வீசியது. அது மட்டும் அல்ல. பாரதப் போரைப் பற்றி சஞ்ஜயன் வெளியிட்ட கருத்து கீதைக்கு மங்கள கீதமாயிற்று. கீதைக்கு உரை அளித்த அறிஞர்கள் பலரும் சஞ்ஜயனின் அக்கருத்தை கீதையின் உட்பொருள் எனவும், உயிர் பொருள் எனவும் உள்ளம் மகிழ்ந்து போற்றினார்கள். எனவே அது "ஏக ஸ்லோகி கீதா" என்னும் பெயர் கொண்டது. புகழ் கொண்டது. இதோ சஞ்ஜயனின் கருத்து: "யோகேசுவரனாகிய கிருஷ்ணனும், காண்டீபம் தாங்கிய பார்த்தனும் எங்கு இணைந்து உளரோ அங்கு செல்வமும், வெற்றியும், பண்பும் நீதியும் வாழும், இது எனது முடிவு." (கீதை அத். 18-78) ஆம்! கண் கண்ட சத்தியம்!

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

# கும்பேசர் கோயில் கிராதமூர்த்தி

பிரம்ம கற்ப காலம் அது. சிவபெருமான் சிந்தை அறிந்து பிரம்ம தேவன் சிருஷ்டி பீஜத்தை ஒரு அமுத குடத்தில் இட்டுப் பாதுகாத்து வந்தார். அக்குடம் ஒரு சமயம் பெரு வெள்ளத்தில் சிக்குண்டு இடம் பெயர்ந்து மிதந்துச் சென்று குடந்தையில் இடம் கொண்டது. வேட்டுவ வேடம் தாங்கி சிவபெருமான் தம்முடைய சிவகணங்களுடன் புறப்பட்டு குடந்தையில் பாணாதுறை என்னும் பகுதியில் எழுந்தருளினார். அமுதம் நிறைந்த அக்குடத்தைக் கண்டு அதன்மீது பாணம் வீசினார். குடம் உடைந்து அமுதம் சிந்தியது. அமுதம் நனைத்த மண்ணை எடுத்து உடைந்த குடத்துடன் சேர்த்து சிவனார் ஒரு சிவலிங்கத்தை வடிவமைத்தார். அதற்குத் தாமே பூசனைப் புரிந்தார். பின்னர் அதனுள் அருள் ஜோதியாய் புகுந்தார். அச்சிவலிங்கமே இன்று நாம் காணும் ஸ்ரீஆதி கும்பேசர் மூர்த்தியாகும். இத்தகைய பெரும் பேற்றை நமக்கு வழங்கியவர் அன்று வேட்டுவக் கோலத்தில் வந்தருளிய அந்த வித்தகர் அல்லவா? அவரும் கிராதமூர்த்தி எனும் திருநாமத்துடன் இங்குக் கோயில் கொண்டுள்ளார். அவரே ஸ்தலமூர்த்தி. மகநட்சத்திரத்தன்று கிராதமூர்த்தியை வழிபடுவது இங்கு சிறப்புடையதாகும்.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

கடைந்து கிடந்த இப்பூமியை, பிரிய மஹிஷியான பூமிப் பிராட்டியை மார் போடணைத்து உகப்பது போல், மார் போடணைத்து மேலே கொண்டுவந்த வராஹமூர்த்தியும் இவன் தானே? ஆகவே சிரமப்பட்டுத் தேர்ந்தெடுக்க வேண்டாதபடி தரமான சந்தனமாகவும், அழுக்கடைந்து மேடும் பள்ளமுமான பூமியை அணைந்தது போல் இராது உன் மார்போடணைவதற்கு ஏற்றதாய் இருப்பது: "பூவை வீயாம் மேனிக்குப் பூசும் சாந்து என் நெஞ்சமே" (திருவாய் 4-3-1) எனப்பூவையொத்த மென்மையான அவனது நெஞ்சையணைய தன் நெஞ்சைத் தருகிறார். மேலும் "கட்டுரைக்கில் தாமரை நின்கண் பாதம் கையொவ்வா" (திருவாய் 3-1-2) என உள்ளிருக்கும் வாத்ஸல்யம் எல்லாம் கண்ணிலே தோற்றும்படி குளிர்ந்த பார்வை. இப்பார்வையில் பட்டார் தோற்று விழுமிடம் அவனது திருவடிகள். விழுந்தாரை ஆதுரத்துடன் வாரியெடுத்து மார்போடணைத்திடுவது அவனது திருக்கரங்கள். அவனது இச்சீலாதி குணங்களே பாதாதி கேசம் விடுத்து இவ்வாறு அருளச் செய்தது போலும்!

"குற்றம் கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; காரியம் செய்யுமென்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வம் கண்டு அகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞான சக்திகள்" என்பது முமுக்ஷுப்படி. குற்றங்களின் கடுமை கண்டு அண்டின தன்னை ஏற்றுக் கொள்வானோ மாட்டானோ என்று அஞ்சாமைக்குக் குற்றங்களைப் போக்யமாகக் கொண்டு ஏற்றுக் கொள்ளும் வாத்ஸல்யம்; நம் காரியம் புரிவனோ மறுப்பனோ என்னும் சம்சயத்தைப் போக்கி நம்பிக்கை உண்டாக்க அவன் காரியங்களைத் தன்னதாகக்கொண்டு நிறைவேற்றி வைக்கும் ஸ்வாமித்வம்; மூன்று உலகங்களுக்கும் நாயகனாயிருக்கும் பெருமைக்குரிய ஸ்வாமித்வம் கண்டு அவனை நெருங்கக்கூசும் அச்சம் தீர உயர்ந்தோன் தாழ்ந்தோன் என்னும் வித்தியாசமின்றி அவர்களோடு புரையறக் கலக்கையாகிற ஸௌசீல்யம்; புறக்கண்களால் அவனைக் காண முடியுமோவெனப் பின்னடைவாரும் தன்னைக் கண்டு பற்றலாம்படித் தன் வடிவை அவர்கள் கண்களுக்கு இலக்காக்குவது ஸௌலப்யம். அடையத்தக்கவனான (ப்ராப்யன்) தன்னை அடைவதற்குத் தடையாய் நிற்கும் விரோதியைப் போக்கித் தன்னைக் காட்டிக் கொடுத்து, கடந்த நிகழ்வருங்கால நடவடிக்கைகளை ஒரு சேர அறிகையும் அறிந்தவாறே செயல் புரிந்து தலைக்கட்டுகையும் ஜ்ஞான சக்திகளாம்.

அடியார்கள் அநுபவத்திற்கு விளக்கமாய் சில நிகழ்ச்சிகளைக் காண்போம்:

தன் கனவை நனவாக்கித் தர வேண்டி திருமாலிருஞ்சோலை மணாளருக்கு ஆண்டாள் நூறு அண்டா நிறைய வெண்ணெயும் நூறு அண்டா நிறைய அக்காரவடிசிலும் சொல்லி வைத்தாள். 'நாச்சியார் திருமொழி' காலக்ஷேப கோஷ்டியில் 'நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு" என்ற பாசுரம் வந்த வளவிலே, ஆண்டாளின் மநோரதம் வாய்ச்சொல்லாகிவிட்டதே என்று உடனே இராமாநுசர் திருமாலிருஞ்சோலை அடைந்து அழகனுக்கு நூறுதடா வெண்ணெயும் நூறுதடா அக்காரவடிசிலும் செய்து வைத்தார். திருவில்லிபுத்தூருக்கும் சென்று ஆண்டாளை மங்களா சாஸனம் செய்வித்தார். ஆண்டாளும் தன் அர்ச்சாகதியையும் விடுத்து, தன் உடன் பிறந்தாரைப் போன்று தன் மநோரதத்தை நிறைவேற்றி வைத்த இராமாநுசரை, 'கோயில் அண்ணன்' என மிக்க வாஞ்சையுடன் அழைத்தாள். இது கேட்டு இராமாநுசர், 'நான் அடி

யேன் அல்லேனோ? என்னை இப்படி அழைப்பதோ' என்று அருளிச் செய்தார்.

"அனந்தாழ்வான் திருமுக்குளத்திலே புக்குத் தடவினார். 'இது வென்' என்ன, அப்பெண் பிள்ளைகள் குளித்ததொரு மஞ்சள் கொழுந்தாகிலும் கிடைக்குமாகக் கருதி காண்" என்றார், என்பது ஐதீகம். அனந்தாழ்வான் என்னும் பெரியார் (ஆண்டாளுக்குப் பிற்காலத்தவர்) மார்கழி நோன்பு நோற்ற பெண் பிள்ளைகள் நீராடின திருமுக்குளத்திலே கைவிட்டுத் துழாவிக் கொண்டிருந்தார். இதன் காரணம் வினவ, அப்பெண் பிள்ளைகள் தேய்த்துக் குளித்ததொரு மஞ்சள் கிழங்கேனும் கிடைக்காதோவெனப் பார்க்கிறேன் என்றாராம். அடியார்கள் உகந்தது எப்பொருளாயினும் அதனைக் கிருஷ்ணன் உகப்புடன் ஏற்றுக்கொள்கிறான். மேலும் தாயின் கரம்பட்டது என்பதாலேயே வெண்ணெயைக் களவு கண்டேனும் உண்கிறான். கிருஷ்ணனோடு கூடின பெண் பிள்ளைகள் திருமேனி தீண்டப் பெற்ற ஒரு மஞ்சள் கிழங்கேனும் கிடைக்காதோவெனத் தேடுகிறார் இப்பெரியார்!

'நூறு தடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்' என அக்காரவடிசிலைச் சொல்லி அதற்குப் பக்குவமாய் 'பாற்சோறு மூட நெய்பெய்து முழங்கை வழிவார' (திருப்பா. 27) எனச் சொல்பவள் ஆகையாலே, 'உத்தமன் பேர் பாட' முதல் ஐந்து பாசுரங்களில், 'பாரோர் புகழப் படிந்து', 'உய்யுமாறெண்ணி உகந்து' 'நீங்காத செல்வம் நிறைந்து' 'மார்கழி நீராட மகிழ்ந்து', 'வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க போய பிழையும் புகு தருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் செப்பு' என்று ஆண்டாள் பக்குவமாய் நம் மனத்தே புகுத்துகிறாள்.

## வடை மாலையின் தத்துவம்

வாயுவின் புத்திரன் ஆஞ்சநேயன். வாயுவுக்கு ப்ரீதி உளுந்து. சமுத்திரத்தை தாண்டினதால் ஆண்மையும், இலங்கையைக் கொளுத்தினதால் பராக்ரமும், அசோகவனத்தில் பிரவேசித்துச் சீதையைக் கண்டதால் சிறந்த புத்தியும் அபரிமிதமாக விளங்குகின்றன.

ஆஞ்சநேயரிடத்தில் சீதை கொடுத்த முத்து மாலையை-பிரம்மச்சாரியானதனால் - அனுமன் அணிந்து கொள்ள இயலவில்லை. அதற்குப் பதிலாக தனக்குப் ப்ரீதியான உளுந்து வடை மாலையையே தேர்ந்தெடுத்துத் தரித்துக் கொண்டார்.

சுந்தர காண்டத்தில் முதல் சர்க்கம் முதல் சுலோகத்தில் 'ததோ ராவண' என்ற பதங்களில் நான்காவது அட்சரமாகிய 'வ' என்பது காயத்ரியின் 12வது அட்சரம். வடை மாலை என்பதில் உள்ள முதல் அட்சரமாகிய 'வ'வும் காயத்ரியின் 12வது அட்சரமாகும்.

காயத்ரியின் அத்தனை அட்சரங்களையும் வடை மாலையாக நினைத்து அதை அணிந்து கொண்டிருக்கிறார். இதுதான் வடை மாலையின் தத்துவம்.

கொழுத்த அரக்கர்களை, வடை தட்டுவதுபோல் இருகைகளாலும் நசுக்கியே அழித்தவர் ஆஞ்சநேயர். அதை நினைவூட்டவே கொழுப்புச் சத்துமிக்க உளுந்து வடை தட்டி மாலையாகச் சாற்றப்படுகிறது என்பர் சிலர். அது அவ்வளவு சரியாகாது.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்-கோவை.

உலக ரக்ஷண சிந்தனை பண்ணிக் கிடப்பதுதான் தன் உறக்கம்; உலகோரின் அவலக்குரல் செவிப்பட்ட வாறே எழுந்து விரோதி போக்கி அவர்களோடு கலக்கையே இனிமை என்றிருப்பவன் எம்பெருமான்' 'எந்தை பெருமான் தனக்கு, அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கு அடியாரடியார் தம் அடியாரடியோங்களே' (திரு. 3-7-6) என எம்பெருமானுக்கு ஏழு தலைமுறை அளவிலே அடிமை புரிபவர்களாகத் திகழும் ஆழ்வார்களை உறங்கப் பண்ணுவதும் உணர்ந்தால் மறக்கப் பண்ணுவதும் போய் அனுபவிக்கப் பண்ணுவதும் இவனுடைய குணங்களே. இக்குணக்கடலிலே மூழ்கித் திளைத்த ஆழ்வார்களையும், இவர்களைத் தம்பால் ஈர்த்துக் கொண்ட ஆராவமுதத்தினையும் இதுகாறும் நாமும் அனுபவித்தோம். இதனால் ஆசையுடையோர், பகவானை அனுபவித்திடலாம்படி செய்தல் 'ஐயம்' எனவும் அவனது அடியார்களை அனுபவித்திடலாம்படி செய்தல் 'பிச்சை' எனவும் சொல்லப்பட்டதாயிற்று.



# கம்பன் காட்டிய திருக்கோயில்கள்

சோழ நாட்டில் பிறந்த கம்பன் தன் பெரும்படைப்பில் சில தென்னாட்டுத் திருக்கோயில்களை நேரடியாகவும் மறைமுகமாகவும் தனக்கே உரிய பாணியில் புகுத்தி ஒரு சூத்திரமாக அமைத்துள்ளான் என்பதை எவ்விடங்களில் என்று கீழே காண்போம்.

விசுவாமித்திர மஹரிஷி இராம இலக்குவருடன் மிதிலாதிபதி ஜனக மஹாராஜாவின் அழைப்பிற்கிணங்கி வேள்விச்சாலை சென்று அடைந்தனர். அவ்வமயம் ஜனகன் பெரு வேள்வியை முடித்து மணிமண்டபத்துள் முனிவர் முதலாயினர் புடைசூழ வீற்றிருந்தார். இராம இலக்குவரை நோக்கி விசுவாமித்திரனிடம் அரசன் வினவ,

“ இருந்த குலக்குமரர் தமை,
இருகண்ணணின் முகத்து
அழகு பருக நோக்கி
அருந்தவனை அடிவணங்கி
யார் இவர்கள்? உணர்த்திடுமின்
அடிகள் ! என்ன ”

அதற்கு விசுவாமித்திரர் ‘ஆதித்தன் குல முதல்வன் மனுவினை யாவரும் அறிவர். அந்த வம்சத்தில் வந்த இக்ஷ்வாகுமன்னன் அநேகவருஷகாலம் தவத்தை விரும்பிச் செய்து, பிரம தேவனை வழிபட்டு அவனருளால் அப்பிரமனது திருவாராதனத்திலிருந்த ஆதிசேஷனை திருப்பள்ளி மெத்தையாகக் கொண்டுள்ள எல்லா வொளிகளினும் உயர்ந்த ஒளிவடிவமான நம் பெருமானை நம்மைப் போலுள்ள பாமரமக்கள் இன்றும் என்றும் வணங்கி வழிபட அழகிய ஸ்ரீரங்க விமானத்துடனே சத்திய லோகத்திலிருந்து பூலோகத்திற்குக் கொண்டு வந்து அயோத்தியில் எழுந்தருளப்பண்ணி வழிபட்டு வந்தான். அந்த ஸ்ரீரங்க நாதனே இக்ஷ்வாகு முதல் இராமபிரான் வரையிலுள்ள இரவிகுல மன்னவரெல்லோருக்கும் குலதெய்வமாய் விளங்கினான். சக்ரவர்த்தி திருமகன் ஏகசத்திராதிபதியாக பட்டாபிஷேகம் செய்து கொண்டபின் சுக்கிரீவன் முதலியோரை விடை கொடுத்தனுப்பும் பொழுது தனது திருவாராதனத்திலுள்ள நம்பெருமாளை சத்பாத்திரமாக விளங்கும் விபீஷணாழ்வாரிடங்கொடுத்து ஆராதித்து வரும்படி நியமித்தனுப்பினான். பின்னால் ஸ்ரீரங்கசாயி “கங்கையிற் புனிதமாய காவிரி நடுவு பாட்டு பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கந் தன்னுள் எங்கள் மால் இறைவன் ஈசன் கிடந்ததோர் கிடக்கை” என்னும்படி அவ்விடத்திலேயே தங்கிய விதம் யாவரும் அறிந்த நிகழ்ச்சியாகும். அப்பேர்ப்பட்ட வம்சத்தில் வந்தவர்கள் இந்த இளங்குமரர்கள்” என்று அறிமுகப்படுத்தினார்.

“ பிணியரங்க வினையகலப் பெருங்
காலம் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை
வழிப்பட்டுப்
பணியரங்கப் பெரும்பாயல் பரஞ்சுடரை
யாங்காண
அணிஅரங்கந்தந்தானை அறியாதார்
அறியாதார் ”

என்று தான் எழுதிய இராமாயணத்தை அரங்கேற்றிய பூலோக வைகுண்டம் என்று அழைக்கும் திருவரங்கத்தை ஏற்றிப்பேசியுள்ளார் கவிச்சக்கரவர்த்தி.

திருவரங்கத்தில் நாதமுனிகள் திருவோலக்கத்தில் எழுந்தருளியிருக்க கம்பர் இராமாயணத்தை அரங்கேற்ற ஆதியோடு அந்தமாய் வாசிக்க அதில் “இரணியன் வதைப் படலத்தை” புகுத்தியுள்ளதை அங்கே குழுமியிருந்த சில வித்வான்கள் மூல காவியத்தை இயற்றிய வால்மீகி ரிஷி இந்த நிகழ்ச்சியை சொல்லவில்லை என்றும், இது நவீனமாக உள்ளதென்றும், ஏதேனும் தெய்வீகம் காட்டினால்தான் ஒப்பக்கொள்ளப்படும் என்று விளம்பினர். கம்பரும் பகவத் சங்கற்பத்தின்படி நடக்கட்டும் என்று துணிந்து அருகே உயரத்தில்உப்பரிகைமாதிரியுள்ளமாடத்தில் மேட்டழிகியசிங்கர் சந்நிதியின் எதிரில் நின்று கீழே உள்ளப்பாடலை வாசிக்கும் தருவாயில்,

திரு. L. P. சம்பத் - சென்னை.

நசை திறந்திலங்கப் பொங்கி நன்று
நன்றென்ன நக்கு
விசைதிறந்துருமு வீழ்ந்த
தென்னவோர் தூணின்வென்றி
இசை திறந்தமர்ந்த கையால்
ஏற்றினான் ஏற்றலோடும்
திசை திறந்து அண்டங்கீறிச்
சிரித்தது செங்கட்சீயம்

அர்ச்சாரூபமாய் எழுந்தருளியிருக்கிற மேட்டழகிய சிங்கப்பெருமாள் சிரக்கம்பம் செய்து சிரித்தார். “இராமாவதாரம்” என நாமம் சூட்டப்பட்டகாவியம் அரங்கேற்றப்பட்டு அங்கீகரிக்கப்பட்டது. நரங்கலந்த சிங்கப்பெருமாளுக்கு சீற்றம் அதிகரித்தவுடன் பிரமதேவன் மழுவேந்திய சிவபிரான் ஏனைய தேவர்களும் துதித்து வணங்கி ஓரமாக விலகிநின்றனர். உலகங்களெல்லாம் இப்போதே அழிந்து விடுமென்று பயந்து நின்றவர்களை சிங்கப்பெருமான் ‘அஞ்சல் அஞ்சல்’ என்று அபயகரத்தால் காட்டினான். அனைவரும்கூடி

*Statement about ownership and other particulars abou*

**SAPTHAGIRI**

**(MONTHLY)**

FORM IV

( *See Rule* 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | TIRUPATI. |
| 2 | Periodicity of its publication | ... | Monthly |
| 3 | Honorary Editor | ... | Sri **M. V. S. PRASAD,** I.A.S. Executive Officer, T.T.D |
| 4 | Printer's Name | ... | Sri M. Vijayakumar Reddy, L.P.T., |
| | Whether citizen of India | ... | Yes |
| | Address | ... | Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name | ... | K. Subba Rao, M.A., |
| | Whether citizen of India | ... | Yes |
| | Address | | Editor, Sapthagiri, T.T.D. Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | ... ... | Board of Trustees represented by the Executive Officer on behalf of T. T. D., Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI,
*Date* : 28-2-1991.

(*Sd.*) **K. SUBBA RAO,**
*Signature of the Publisher.*


பெரிய பிராட்டியாரை அழைத்து வந்தால் உசிதம் என்றுணர்ந்து,

“ பூவில் திருவை அழகின் புனை
கலத்தை
யாவர்க்குஞ் செல்வத்தைவீடென்னும்
இன்பத்தை
ஆவித் துணையை அமுதில்
பிறந்தாளைத்
தேவர்க்கும் தம்மோயை மேவினார்
பாற்செல்ல ”

அவ்வாறே,

செந்தாமரைப் பொகுட்டிற்
செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை நறுந்தாழ்இளங்
கொழுந்தை
முந்தாவுலகும் உயிரும் முறை
முறையே
தந்தாளை நோக்கினான்
தன்னொப்பொன்றில்லாதான்

திருமகள் செந்தாமரையை விட்டு புருஷகார பூதையாய் பெருமாளின் சீற்றத்தை சீதனப்படுத்த வந்து கொண்டிருப்பதை நோக்கினான். தனக்கு ஒப்பொன்றில்லாதவன் என்று கம்பர் தன் மனதில் ஒப்பிலியப்பனை மனதில் கூர்ந்தார் என்பது நன்கு விளங்குகிறது. இந்த திவ்ய தேசத்திற்கு ‘ திருவிண்ணகரம் ’ என்றும் பெயர் உண்டு. இதையே திருவாய்மொழியில் நம்மாழ்வார்,

“என்னப்பன் எனக்காய் இகுளாய்
என்னைப் பெற்றவளாய்
பொன்னப்பன் மணியப்பன்
முத்தப்பன் என் அப்பனுமாய்
மின்னப்பொன் மதிள் சூழ்
திருவிண்ணகர் சேர்ந்த அப்பன்
தன்னொப்பார் இல்லப்பன்
தந்தனன் தன் தாள்நிழலே

இராமன் இலக்குவன் சீதை மூவரும் அத்திரி முனிவருடைய தர்மபத்தினியான அனசூயை உடன் தங்கி ஆசிகள் பெற்றுக்கொண்டு பிறகு தண்டகவனம் நுழையும் தருவாயில் கன்னங்கரேலென்றுள்ள நிறத்துடனே கொடுமையே வடிவெடுத்தார் போன்றுள்ள தீவினையே புரியும் விராதன் என்றரக்கன் சகல பிராணிகளும் ஒன்றுசேர்ந்து புதுமையாய் ஓர் வடிவு கொண்டது போல இடியோசையுடன் தோன்றி ‘ நில்லும் நில்லும் ’ என்று சொல்லியவாறே சீதையைத் தூக்கிக் கொண்டு விசும்பில் சென்றான். பிறகு இராமனின் சிலை நாணொலியைக் கேட்டதும் சீதையை கீழே இறக்கிவிட்டு இரகு குலதிலகனையும் இளவலையும் தோள்களில் ஏற்றிக்கொண்டு விரைந்தான் விராதன். அக்கணமே அரக்கனின் தோள்களை வெட்டி பிறகு இராமபிரான் தன் திருவடிகளால் அவனை உந்தித் தள்ளினான். விராதன் சாகாவரம் பெற்றவனாகையால் அவனை அப்படியே மண்ணில் தள்ளி புதைக்க இலக்குவனுக்கு ஆணை பிறப்பிக்க, அவ்வமயம் உடலை விட்டு முந்திய சாபம் நீங்கப்பெற்று விண்ணிடை பழைய கந்தர்வ சரீரத்துடன் விளங்கினான் வானரக்கன்.

விராதன் திவ்ய ரூபத்துடன் தத்துவ ஞானத்தோடு ஸ்ரீ ராமனை ஸ்ரீமந் நாராயணனின் விபவ அவதாரம் என்று நன்குணர்ந்து புகழ்ந்து பாடியதை பதினான்கு பாசுரங்களாய் வைணவ சம்பிரதாயம் பொதிந்து கிடக்கும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியின் சாராம்சத்தை இந்த சந்தர்ப்பத்தில் விளக்கியுள்ளார் கவியரசர். அதில் ஒரு பாசுரத்தில் தன்னைப் போலவே பிரமனும் ஐந்து

தலைகளுடையவனாயிருப்பது பலர் மயங்குவதற்கு இடம் கொடுக்கிற தெனக் கருதி, பரமசிவன் பிரமனின் சிரம் ஒன்றைக் கிள்ளிவிட நான்முக னின் கபாலம் பரமேஸ்வரனின் கையில் ஒட்டிக் கொள்ள, பிறகு கபாலி என்றழைக்கப்பட்டு பிக்ஷாண் டவராய் அலைந்து திரியும் பொழுது, இதற்கு என்ன பிராயசித்தம் என்று வினவ தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவம் தொலையப் பிச்சை யெடுக்க வேண்டும். என்றைக்கு இந்த பிரம்ம கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையை விட்டு அகலும்' என்று உரைக்க கருமிடற் றோன் பல காலம் பல தலங்களுக்குச் சென்று பிக்ஷையை ஏற்றுக்கொண்டு வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நிறைந்து நீங்காதாக, ஒரு நாள் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை அடைந்து ஏற்ற போது, அவர் "அக்ஷயம்" என்று பிக்ஷை சாதித்தருள ஒட்டிக் கொண்ட கபாலம் கையை விட்டகன் றது. இந்த நிகழ்ச்சியை குறிக்கும் வகையில் அமைந்துள்ளது கம்பர் பிறந்த தஞ்சையிலுள்ள 'திருக்கண் டியூர்' என்ற திவ்ய தேசமாகும். அங்கே எழுந்தருளியிருக்கும் பெரு மாளுக்கு 'ஹர சாபவிமோசனப் பெருமாள்' என்று பெயர். இந்த நிகழ்ச்சியை மனதில் உன்னி கவியர சன் விராதன் துதியில் புகுத்தியுள் ளான்.

"மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீ
விதித்த மன்னுயிர்கள்
உய்யத்தானாகாதோ உனக்கென்ன
குறையுண்டோ
வையத்தார் வானத்தார்
மழுவாளிக்கு அன்றளித்த
ஐயத்தால் சிறிது ஐயம் தவிர்ந்தாரு
முளரையா

இதேகருத்தை கலியனும் திருக் குறுந்தாண்டகத்தில் கூறுகின்றார்.

பிண்டியார் மண்டை ஏந்திப்
பிறர்மனை திரிதந்துண்ணும்
உண்டியான் சாபம் தீர்த்த ஒருவனூர்
உலகமேத்தும் கண்டியூர்.........

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (அச்சில்) (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 9. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 10. | முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |
| 11. | திருப்பாவை (அச்சில்) | |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

யுத்த காண்டத்தில் முதற்போர் புரிபடலத்தில் இராவணன் இரதத்தில் ஏறி யுத்த களத்திற்கு வருவதை நோக்கிய ஆஞ்சநேயர், ஸ்ரீ இராமபிரான் தரையில் நடந்து வருவதை விரும்பாமல் "என் தோளில் ஏறிப் பொருக" என்று வினவ, சக்ரவர்த்தி திருமகனும் உடன்பட்டு அனுமனது தோளில் ஏறினன். இவ்விடம் கம்பனின் சொல்லழகு நம்மை சேலம் அருகேயுள்ள நாமக்கல்லுக்கு அழைக்கின்றது. இந்தப்பாயிரம் தங்கள் ஊரை குறிப்பதாக அமைந்துள்ளது என்பது அந்த ஊர் அறிஞர்களின் அனுமானம். சூழ்நிலையை நோக்குங்கால் இதில் நியாயமும் உள்ளது. ஆஞ்சநேயர் களிப்புற்று ஸ்ரீ இராமச்சந்திரனுக்கு சேவை செய்ய ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததைக் குறித்து நாமகிரியில் எழுந்தருளியிருக்கும் நரசிம்மரையும் ஆஞ்சநேயரையும் ஒரே பாசுரத்தில் சிறப்பாக அமைத்துள்ளான்.

"நன்று நன்றொனா நாயகன்
ஏறினான் நாமக்
குன்றின் மேல் இவர் கோளரி யேறு
எனக்கூறி
அன்று வானவர் ஆசிகள்
இயம்பினர் ஈன்ற
கன்று தாங்கிய தாயென மாருதி
களித்தான்"

சிறப்புப் பொருந்திய மலையின் மீது ஏறின கொல்லுந்தன்மையுள்ள சிங்கம் என்று இராமனை அநுமன் மேல் தோன்றிய காட்சி என்று கூறியுள்ளான். யுத்தகளமாகையால் கொல்லுந்தன்மையென்றும் இரணியனைக் கொன்ற அவசரத்தில் நரசிம்மன் சேவை சாதிப்பதால் அதுவே உபமானமாக அமைந்துள்ளது. மேலும் நரசிம்மன் சந்நிதியை நோக்கியவாறு ஆஞ்சநேயர் எழுந்தருளியிருப்பது இப்பாசுரத்திற்குப் பொருத்தமாக அமைந்துள்ளது.

சுக்ரீவன் அனுமானைப் புகழ்ந்து பிராட்டியைத்தேட அங்கதன் முதலியோருடன் இராவணன் நகராகிய இலங்கை தென்திசையில் இருப்பதாக ஞாபகம் என்று கூறி அவ்விடம் நோக்கிச் செல்ல கட்டளை பிறப்பித்தான். வழியில் தோன்றும் கோதாவரி நதி, மற்றுமுள்ள மலைகளையும் அடையாளமாக செப்பி,

"வடசொற்குந் தென் சொற்கும்
வரம் பிற்று ஆய் நான்மறையும்
மற்றை நூலும், இடை சொற்ற
பொருட்கெல்லாம் எல்லையதாய்
நல்லறத்துக்கு ஈறு ஆய்வேறு, புடை
சுற்றுந் துணையின்றிப்
புகழ் பொதிந்த மெய்யே போல்
பூத்துநின்ற அடைசுற்றந்
தண்சாரல் ஓங்கிய வேங்கடத்தில்
சென்று அடைதிர்மாதோ"

'சப்தகிரியில் கருணாமூர்த்தியாய் அருள்பாலித்து வரும் திருவேங்கடமலையைப் போய்ச்சேருங்கள்' என்று உரைக்குமிடத்து, கம்பர் வடமொழியாகிய ஸம்ஸ்கிருத பாஷைக்கும் தென்மொழியாகியதமிழ்பாஷைக்கும் மத்தியில் அமைந்திருக்கும் "வேங்கடமலை"என்றுகுறிப்பிடுகிறார்.மேலும் வேதாந்தமும், உபய வேதாந்தமும் அனுசந்திக்கப்படும் வெற்பு என்றும் கொள்ளலாம். நான்கு மறைகளால் அறையப்படும் பரம்பொருளான முழுமுதற் கடவுளான திருமாலைக் கொண்டுள்ளது. அந்த மாமலையில் தேன் கூண்டுகளால் சுற்றிலும் நிரம்பப் பெற்ற குளிர்ச்சியான பொழில்களும், தாழ்வரைகளும் கொண்டது "வேங்கடம்". "அவ்விடத்தைச் சேர்ந்து அடையுங்கள்" என்கிறான்சுக்கிரீவன். மேலும் பயன் கருதாது இருவினைகளையும் களைந்து உய்ந்து போக தத்துவ ஞானம் வாய்ந்து வாழ்ந்து வரும் பெரியோர்கள் பலர் உளர். அவர்களை இவ்விடத்திலிருந்தே (கிஷ்கிந்தை) தண்டனை சமர்ப்பித்தற்கு உரியவராவார்.

அதே சமயத்தில் சுக்கிரீவன் ஒரு எச்சரிக்கையும் விடுகிறான்.

"கோடுறு மால் வரையதனைக்
குறுகுதிரேல் உம் நெடிய
கொடுமை நீங்கி, வீடுறு திர்,
ஆதலினால் விலங்குதிர்
அப்புரத்து, நீர்மேவு தொண்டை
நாடு உறுதிர்
உற்றதனைநாடி அதன் பின்னை
அவை நளிநீர்ப்
பொன்னிச் சேடுறுதண் புனல்
தெய்வத்திரு
நதியின் இருகரையுஞ்சேதிர் மாதோ"

"சிகரங்கள் பொருந்திய பெரிய அத்திருவேங்கட மலையில் புகுந்த மாத்திரத்தில் இருவினைத் தொல்லைகளும் ஒழிந்து நீங்கள் முக்தி அடைவீர்கள்; அவ்வாறு முக்தியை அடைந்து விட்டால் ஸ்ரீராமகாரியம் நடவாது; ஆதலில் அங்குச் செல்ல வேண்டா" என்கிறான் வானர அரசன்.

இவ்விடத்தில் கவிச்சக்ரவர்த்தி தனக்கு ஏழுமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் மேல் கொண்ட பக்தியை சுக்ரீவன் வாயிலாக தெரியப்படுத்துவதுமல்லாமல் அந்த வானர அரசனுடைய கடமைப் பொறுப்பையும் நன்றாகத் தெளிவுப்படுத்தியுள்ளார்.



# ஆராய்ச்சிக்கு ஓர் அண்ணா

திரு. K. K. A. ரங்கராஜன், B.Com., M.A. திருப்பதி.



**ஸ்ரீமான் உ. வே. காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமியின் நூற்றாண்டு 1891 — 1991 நினைவுச் சிறப்புக்கட்டுரை.**

பூமகளார் தனிக்கேள்வன் திரு நாரணன். அவன் ஸத்ய ஸங்கல்பன். தானிட்ட வழக்காக உலகை ஆள்பவன். இவ்வுலகில் தானே ஆசார்யனுமாக, சிஷ்யன் எவ்வாறு இருக்க வேண்டுமென்பதை உலகத்தார் அறிவதற்காகத் தானே சிஷ்யனுமாக அவதரித்தான் எம்பெருமான். தம்முடைய ஸங்கல்பத்தாலே இக்கலியுகத்தில் எளிதாகிய அர்ச்சாவதாரத்தில் தான் அந்தர்யாமியாக வந்து அவதரித்தான். அவனே மயர்வு என்னும் அறிவின்மையைப் (அஜ்ஞானம்) போக்கி நல்ல ஞானத்தை (மதிநலம்) ஆழ்வார்களுக்கருளி இன்கவிபாடும் பரம கவிகளை உண்டாக்கி அவர்களின் திருவாக்கால் தம்முடைய கீர்த்திகளையும் கல்யாண குணங்களையும் பாடுவித்துக் கொண்டான். அப்படிப்பட்ட குண கீர்த்தனங்களே திவ்யப்பிரபந்தம் என்று பெயரிட்டு ஸ்ரீமந்நாதமுனிகள் என்னும் மஹாசாரியரால் தொகுத்து, இன்றைய தினம்வரை எல்லாக்கோவில்களிலும், திருமாளிகைகளிலும் ஓதப்பட்டு வருகின்றன. அப்படிப்பட்ட பக்த கர்ணாம்ருதமாகிய திவ்யப்பிரபந்தப் பாசுரங்களின் அர்த்தங்களையும் அழகுகளையும் ஆசாரியர்கள் அவ்வப்போது வியாக்கியானங்களாக அருளியுள்ளனர். அந்த அருளிச் செயல்கள் இந்தக் காலத்து மக்களுக்குப் புலப்படுமாறு எளிய தமிழ் நடையில் சிறப்பான உரை வகுத்த பெருமான் ஒருவர் உளர்.

அப்பெருமான் 'நகரேஷு காஞ்சீ' என்னும் காஞ்சீ மாநகரில் ஆழ்வாராகவும், ஸ்வாமி எம்பெருமானாகவும், மணவாளமாமுனிகளாகவும் ஒன்றுசேர்ந்த ஒரு திருவுருவான மஹாசாரியராக விக்ருதி ஆண்டு (கி.பி. 1891) பங்குனித் திங்கள் விசாக நக்ஷத்திரத்தில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய ஸ்வாமி என்னும் திருநாமத்துடன் இவ்வுலகில் தோன்றினார்.

"இன்றைப் பெருமை யறிந்திலையோ
ஏழை நெஞ்சே
இன்றைக் கென் னேற்ற மெனிலுரைக்
கேன் நன்றிபுனை"
நம் பூருவர்தம் சீர்வுரை காத்தளித்த
அண்ணங்கர்
தம்பங் குனி நாள் விசாகமே.

'பெரியார்க் காட்பட்டகால் பெறாத பயன்' பெற்று அருளிச்செயலிலும் வேதங்களிலும், பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களிலும், ஸ்தோத்ர பாடங்களிலும், இதிஹாஸ புராணங்களிலும் தமது ஆராய்ச்சியினைக் காட்டி 'உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெத்திலையு மெல்லாங் கண்ணன்' என்னுமாப்போல கிரந்தங்களிலேயே தமது போதினை 93 பிராயம் வரை போக்கினார். அவர்தம் இலக்கிய இலக்கணத் திறமையினையும் ஆராய்ச்சியின் நுணுக்கத்தையுமே இக்கட்டுரைஎடுத்தியம்புகிறது.

பூருவர்களின் வியாக்கியானங்களில் உள்ளதை உள்ளபடியே சொல்லி மேலும் தாமே சில மேற்கோள்களைக் காட்டி மிளிரச் செய்துள்ளப் பாங்கு ஸ்வாமிக்கே தனித் தன்மையானது.

1. 'கீழ்வானம் வெள்ளென்று' என்கிற திருப்பாவை (8)யில் கடைசி

அடியான 'தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால் ஆவாவென்றாராய்ந்தருள்' என்னும் தொடருக்கு ஸ்ரீராமாயணத்திலிருக்கும் விசேஷார்த்தத்தை முதற்கண் சிந்திக்கச் செய்து அதன்பின் பாசுரத்தின் பொருளை விளக்குகிறார்.

அயர்வறுமமரர்களதிபதியாய், ஸர்வேச்வரனாய், காரணபூதனான உபாஸ்யனாய் இருக்கிறவனை நாம் சென்று ஸேவித்தால் ஆஹாவென்று வந்து நமக்கு அருள்புரிவன் எம்பெருமான் என்று பூருவாசாரியர்களின் வியாக்கியானம் அமைந்துள்ளது. அதற்கு ஸ்வாமி முதலாவதாக ஸ்ரீராமாயணத் தொடரை எடுத்துக் கூறி அதன் பொருளையும் பாசுரத்தின் பொருளையும் விளக்குகிறார். அதாவது அரக்கர்களால் நலிவெய்தி வருந்துகிற மஹர்ஷிகளைத் தாமே சென்று ஆறுதல் சொல்லப் பார்த்திருக்கும் ஸமயத்தில் அந்த மஹர்ஷிகளே பெருமாளிடம் பதறி ஓடி வந்ததைக் கண்ட பெருமாள் 'உங்களிடம் நான் வந்து விசாரிக்க வேண்டியிருக்க, நீங்கள் என்னைத் தேடி வரும்படி நான் பிற்பாடனாகி விட்டேனே!' என்ற பொருள் செறிந்த ஸ்ரீராமாயண ச்லோகத்தில் 'ப்ரஸீதந்து பவந்தோமே' என்னும் தொடரைக் காட்டி, எம்பெருமான் அடியார்களின் உபசாரத்தை ஏற்றுக்கொள்பவனாயிருக்க, அவனிருக்குமிடத்தே நாம் சென்றால் ஆஹாவென்று அலமாப்போடு நில்லாது ஜீவாத்ம பரமாத்மாவின் ஸ்வரூபம் அறிந்தவர்களாவென்று ஆராய்ந்து அதற்குத் தக்கபடி அருளும் குணமுடையவன் எம்பெருமான் என்பதை ஸ்வாமி விளக்குகிறார். ஆக இந்த ஆராய்ச்சியினால் பரகத ஸ்வீகாரமே உயர்ந்தது என்பது விளக்கப்படுகிறது. பரகத ஸ்வீகாரமாவது நம் முயற்சியில்லாது எம்பெருமான் தானே பாரித்து நம்மை ஆட்கொள்ளுந் தன்மை என்பதாகும்.

திருவாய் மொழியில் 'உருகுமால் நெஞ்சம்' என்னும் பதிகத்தில்,

> வாரிக்கொண்டு உன்னை விழுங்கு
> வன் காணிலென்று
> ஆர்வுற்ற வென்னை யொழிய என்
> னில் முன்னம்
> பாரித்து தானென்னை முற்றப்
> பருகினான்
> காரொக்கும் காட்கரையப்பன் கடி
> யனே (9-6-10)

என்னும் பாசுரம் உயிரானதாக ஸ்வாமி எடுத்துக் கூறுகிறார். என்னென்னில் ஈச்வர லாபம் சேதனர்களுக்குப் புருஷார்த்தமா அல்லது சேதந லாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமா என்னும் ஆராய்ச்சியில் சேதந லாபம்தான் ஈச்வரனுக்குப் புருஷார்த்தம் என்பதே ஸித்தாந்தம் என்பதனைக் கூறி, மேலும் கீதையிலிருந்து 'ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்னும் தொடரையும் விளக்கி, இன்னும் ஸ்ரீ பாஷ்யத்திலிருந்து மேற்கோள் காட்டி இப்பாசுரத்தின் பொருளை நமக்கு உணர வைக்கிறார். இப்பாட்டில் 'என்னில் முன்னம் பாரித்து தானென்னை முற்றப் பருகினான்' என்பதே மிக முக்கியமான தொடராகும். சேதனனுக்கு முன்பே நெடு நாளாக தம் மனத்தில், சேதனனை நாம் பெற வேண்டுமென்று பாரித்து அவ்வாறே தலைக்கட்டினான் எம்பெருமான் என்பதை 'ஜ்ஞாநிநம் லப்த்வா' என்னும் ஸ்ரீ பாஷ்யச் சொல்லைப் பெய்து தெளிவிக்கிறார். இங்கும் ஸ்வகத ஸ்வீகாரமான தம் முயற்சியால் புருஷார்த்தத்தைப் பெறுவதைக் காட்டிலும் பரகத ஸ்வீகாரமே வலிதென்றும் கார்யகரமென்றும் தம்முடைய ஆராய்ச்சியினை ஸ்வாமி வெளிக்காட்டுகிறார். முன்னோர்களின வியாக்கியானத்தில் இதைப்போல் தெளிவாகக் காட்டப்படவில்லை. இது இக்கால மக்களுக்கு நன்கு விளங்குமாறு அமைந்துள்ளது.

திருப்பாவையில் மற்றொரு பாசுரம் 'மாரிமலை முழைஞ்சில்' (23) என்பதில் 'யாம் வந்த காரியமாராய்ந்தருள்' என்பது இறுதியான அடியாகும். அதற்குப் பூருவாசாரியர்கள் வியாக்கியானத்தில் 'நாம் போமிடந்தேடிக் காலம் பார்த்து எதிர் சூழல் புக்கு புருஷகாரமாகப் பற்றி நாம் படுவதெல்லாம் நீங்கள் படுவதே! நீங்களென் செய்திகோள்! என்பட்டிகோள்!' என்பதாகவுள்ளது. இத்தொடருக்கு ஸ்வாமி அவ்வுரையை விளக்கும் பாங்கினைக் காண்போம்.

தண்டகாரண்ய முனிவர்கள்! 'ஏஹி பச்ய சரீராணி' என்று அரக்கர்களால் தம் உடல்களைத் தின்று அதனால் உண்டான புண்களைப் பெருமாளுக்குக் காட்டித் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்காரியமாக வந்தார்கள். 'நாங்கள் (பெண்கள்) அவ்வாறு வந்தோமா? பூவும் மணமும் போலே உன்னோடு இணை பிரியாது சேர்ந்திருக்க வந்தோம்; உனக்கே ஆட்செய்ய வந்தோம். ஆகவே இவ்விஷயத்தில் நீ நன்கு ஆராய்ந்தருள வேணும்' என்று ஆய்க்குலப் பெண்கள் சொல்லுவதாக ஸ்வாமி தம் ஆராய்ச்சியினால் காட்டுகிறார். ஒவ்வொரு பாசுரந்தோறும் ஆராய்ச்சி செய்து உலகுய்யச் செய்துள்ளார். திருப்பாவை முழுவதையும் எம்பெருமானார் பரமாகவும் 'ஆழ்பொருள் விளக்கு' என்ற தலைப்பில் தமது திறமையினை வெளி உலகுக்குக் காட்டியுள்ளார். இத்திருப்பாவையை அப்படியே வடமொழியிலும் மொழி பெயர்த்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

'ஊரெல்லாம் துஞ்சி' என்னும் திருவாய்மொழிப் பதிகத்தில் 'ஆரென்னை யாராய்வார் அன்னையரும் தோழியரும்' (5-4-5) என்னும் பாடலில் உலகத்தையெல்லாம் ஆராயப் பிறந்த ஆழ்வார் தமது திருவாக்காலே தம்மை 'ஆரென்னை யாராய்வார்' என்னும் விலக்ஷணமான நோயே ஆட்கொண்டதாக ஸ்வாமி நம்மாழ்வாரின் திருவுள்ளமறிந்து வருணிக்கும் பாங்குதான் என்னே! அதாவது ஆழ்வார் தானான்

தன்மையை விட்டுத் தலைவியாகித் தம் தலைவனான எம்பெருமானின் பிரிவினால் தமக்கு ஏற்பட்ட பசலை நோயாலும் மன வருத்தத்தாலும் துன்புறும் தம்மை அன்னையரும் தோழிமார்களும் அறிய மாட்டுகின்றிலர். அவர்களில்லாதபோது வரும் கண்ணனும் வாராதொழிந்தான். அவனோடு (எம்பெருமான்)தன்னைச் சேர்த்து வைப்பார் யாருளர் என்பதான ஆழ்வாரின் அலமாப்பினை ஸ்வாமி எடுத்துக் கூறுகிறார்.

ஸ்வாமியின் ஆராய்ச்சியை இலக்கண அடிப்படையிலும் காணலாம்.

'கண்ணுஞ் செந்தாமரை' (திருவிருத். 43) என்னும் பாசுரத்தில் "விண்ணுங்கடந்தும் பரப்பால்மிக்கு மற்றெப்பால் 'யவர்க்கும்' என்னும் மூன்றாமடியில் 'யாவர்க்கும்' என்பது 'யவர்க்கும்' என்று குறுகியுள்ளது என்பதைச்சொல்லி திருவாய் மொழியிலிருந்து சான்றுகள் காட்டிச் சுட்டுகிறார்.

1. உயர்வற வுயர்நலமுடையவன் யவனவன் (1-1-1).

2. நெஞ்சினால் நினைப்பான் யவன் (3-6-9).

3. பயிலுந் திருவுடையார் யவரேலுமவர் கண்டீர் (3-7-1).

என்ற தொடர்களில் வரும் யக்ரம், எகர முதலதாகக் கொள்ளக்கூடாது; 'ஆவோடல்லது யகர முதலாது' (தொல். எழுத்து. மொழி. 32)என்ற விதி இயற்கை மொழிக்கேயன்றிச் செய்யுளில் வேண்டுழிக் குறுக்கல் பெற்ற மொழிக்கு விலக்காது என்பதனையும் வலியுறுத்தி விளங்க வைக்கிறார் ஸ்வாமி.

மூன்றாம் திருவந்தாதியில் 'எழில் கொண்டு' (86) என்னும் பாசுரத்தில் முதற்பதமான 'எழில் கொண்டு' என்பதே பெரும்பான்மையாக வழக்கில் ஓதப்பட்டு வருகின்றது. 'எழில் கொண்டு' என்னும் வினையெச்சமான சொல் வியாக்கியானத்திற்குப் பொருந்தாது. 'எழிலையுடைத்தான மின்னை' என்பதான பொருள் காணப்படுதலால் 'எழில் கொண்ட மின்னுக்கொடி' என்னும் பெயரெச்சமே பொருந்தும் என்பதை தமது திவ்யார்த்த தீபிகை யுரையிலும் காட்டியுள்ளார்.

'வெறபென்று வேங்கடம்பாடும்' (69) என்னும் பாடலில், மூன்றாம் திருவந்தாதியை அருளிய பேயாழ்வார் தாமான தன்மையைவிட்டுத் தலைவியாகியபெண்நிலைமையை எய்தி திருநாரணனின் திருநாமங்கள், திருக்கல்யாண குணங்கள், திவ்விய சேஷ்டிதங்கள் (திருவிளையாடல்கள்), வடிவழகு, திவ்விய தேச வளங்கள் ஆகியவற்றை அனுபவித்துப் பாடுகிறாள். இந்தப் பாடலில் பாடும், சூடும், புகும் என்ற சொற்களே வந்துள்ளன. இப்பாடலில் எழுவாய் இல்லையாதலால் 'என் மகள்' என்னும் சொல்லை வருவித்துக் கொண்டுப் பொருள் காண வேண்டும் என ஸ்வாமி கூறுகிறார். மேலும் 'பல்லோர் படர்க்கை முன்னிலைத் தன்மையில் செல்லாதாகும் செய்யுமென் முற்றே' (348) என்ற நன்னூல் சிறப்பு விதிச் சூத்திரத்திற்குப் பொருந்தாமையைக் காட்டி, 'நீர் உண்ணும் என முன்னிலையிற் பன்மையே வலாய் வருதல் புதியன புகுதல்' என்னும் நன்னூல் உரைகாரர்களின் விளக்கத்தையும் எடுத்துக் காட்டி இதைப் புதியனப் புகுதலாகக் கொள்ள வேண்டுமென்று ஸ்வாமி விளக்கந்தருகிறார்.

தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்கிருதம், ஹிந்தி போன்ற எந்த மொழி நூலையும் நன்கு ஆராய்ந்துப்படிப்போர்க்கு மிக எளிதாகப் புரியும் வகையில் எழுதிச்செல்வர் ஸ்வாமி. 'பாரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்க' (சிறிய திருமடல்) என்னுமாப்போலே இவருடைய ஆராய்ச்சித் தொண்டு அமைந்துள்ளது. இப்படிப்பட்ட ஆராய்ச்சித் திறமையைக் கண்டோர் 'ஆராய்ச்சிக்கோர் அண்ணா' என்று ஸ்வாமியைப்பற்றிக் கூறுவர்களாகில் உலகத்தார் பெருமிதம் கொள்வர் என்பதில் ஐயமில்லை.

அண்ணங்கராசாரியர் திருவடிகளே சரணம்

★

---

(28-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பெயரையே மகனுக்குச் சூட்டினான். சில காலத்தில் நீலன்இறக்க,மைந்தன் நீலனை சோழ மன்னன் அழைத்து, அவனையே நாட்டை ஆண்டு வரும்படி பணித்தான்.

ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள் என்ற திவ்ய ஞானம் இவரிடத்து இருப்பினும் சிற்றின்பப்பிரியராகவே காலம் கழித்து வந்தார். திருநாங்கூர் பாகவதர் ஒருவர் திருவாலி நகரை வணங்கித் தடாகத்தில் தியானம் செய்துகொண்டிருந்தார். அங்கு திருவாலி நாதரை வணங்க வந்த தேவமாதர்கள், ஒரு தேவகன்னிகையை விட்டுச்செல்ல, இவர் அவளுக்கு குமுதவல்லி எனப்பெயரிட்டுத் தன் புத்திரியாக வளர்த்து வந்தார். நீலன் அப்பெண்ணை மணந்து கொண்டு தினசரி 1008 வைணவர்களுக்கு ஆராதனை செய்து, அவர்களது பாத தீர்த்தத்தை உட்கொண்டு வாழ்ந்து வந்தார்.

சோழ மன்னன் இவரிடத்தில் பகுதிப் பணத்தைக் கேட்க, இவர் தராததால், தன் சேனையோடு வந்து போர் தொடுத்தான். ஆழ்வாரைப் பட்டினி கிடக்கும்படி செய்தான். பகவான் கனவில் தோன்றி, "உமக்கு வேண்டிய திரவியங்களைத் தருகிறோம். நீர் காஞ்சிக்கு வாரும்" என்று கூறி மறைந்தார். அவ்வாறே காஞ்சிக்குச் சென்று வேகவதிக் கரையில் புதையலை எடுத்து, அதைப் பகுதித் தொகையாகக் கட்டி திரும்ப

வந்து குமுதவல்லியோடு வாழ்ந்து வந்தார். இதைக் கேள்வியுற்ற மன்னன் அவரைப் பாராட்டி, வெகுமானம் அளித்து கௌரவித்தான். ஆழ்வார் கடன்பட்டும் அடியார் ஆராதனையை குறைவின்றி நடத்தி வந்தார். ஒரு நாள் பொருளின்றி ஆராதனம் முட்டுப்பெற, வழிப்பறி செய்தேனும் நடத்தும்படி குமுதவல்லி கூற, இவரும் அவ்வாறே செய்து வந்தார். இவருக்கு இறைவனுடைய கிருபை கிட்டும் நற்காலப் பேறு உண்டாயிற்று.

ஒருநாள் வழிப்பறி செய்யச்சென்ற போது, விஷ்ணு லட்சுமி சமேதரராக சர்வாபரண பூஷிதராக வர, இவர் அவர்களது ஆபரணங்களைக் கழற்றிக் கொடுக்கும்படி கூற அவர்களும் கொடுத்தனர்கால்விரலிலுள்ளமோதிரத்தைக் கழற்றும்படிக்கூற, அது தன்னால் முடியவில்லை எனவும், இவர் பற்களால் கடித்து இழுக்க, "இவன் கலியனோ" எனக் கூறி பகவான் ஆழ்வாருடைய சிரசின்மீது ஒரு கையை வைத்து அமுத்தினார். இவர் திகைத்து, "உன்னிடம் ஏதோ மந்திரம் உள்ளது. அதை எனக்குக் கூறுக" என இறைவனை வற்புறுத்தினார். சுவாமி அஷ்டாக்ஷர மந்திரத்தை உபதேசித்து தனது திவ்ய ஸ்வரூபத்தைக் காட்டியருளினார். தமது தீச்செயல்களை விடுத்து திருமந்திரப் பிரபாவத்தைப்பாடி அருளினார்.

"வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மொடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்".

அதன்பின் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, பெரிய திருமடல், சிறிய திருமடல் எனும் 6 பிரபந்தங்களைத் திருவாய் மலர்ந்தருளியபின் பௌத்தர்களை வாதில் வென்று, ஸ்ரீரங்கம் சென்று அரங்கனை வழிபட்டு வரும்போது பகவான் காட்சி தந்தருளினார். பின்னர் திருக்குறுங்குடி வந்துசேர்ந்து ஐவகை நம்பிகளையும் சேவித்து, அழகிய நம்பியின் அருளினால் வைகுண்ட பரமபதம் அடைந்தார். இவர் பகவானைக் குறித்து 1361 பாசுரங்களைப் பாடியருளினார்.





திருமங்கை ஆழ்வார்.

(இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ள ஆழ்வார்களின் திருவுருவச் சிலைகள் திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி திருக்கோயிலில் எழுந்தருளப் பெற்றுள்ளன) ஆர்.

நாலாயிர திவ்யபிரபந்தம்

| முதலாயிரம் (உட்பிரிவுகள்) | பெரிய திருமொழி (உட்பிரிவுகள்) | இயற்பா (உட்பிரிவுகள்) | திருவாய்மொழி (உட்பிரிவுகள் இல்லை) |
|---|---|---|---|
| 1. திருப்பல்லாண்டு | 1. திருக்குறுந்தாண்டகம் | 1. (1), (2), (3) திருவந்தாதிகள் | |
| 2. பெரியாழ்வார் திருமொழி | 2. திருநெடுந்தாண்டகம் | 2. நான்முகன் திருவந்தாதி | |
| 3. திருப்பாவை | | 3. திருவிருத்தம் | |
| 4. நாச்சியார் திருமொழி | | 4. திருவாசிரியம் | |
| 5. பெருமாள் திருமொழி | | 5. பெரிய திருவந்தாதி | |
| 6. திருச்சந்த விருத்தம் | | 6. திருவெழுகூற்றிருக்கை | |
| 7. திருமாலை | | 7. சிறிய திருமடல் | |
| 8 திருப்பள்ளியெழுச்சி | | 8. பெரிய திருமடல் | |
| 9. அமலனாதிபிரான் | | | |
| 10. கண்ணிநுண்சிறுத்தாம்பு | | | |

# நின்று அருளும் அருளாளப் பெருமாள்

"வடக்கே காசி, தெற்கே காஞ்சி" என்று கூறுவர் சான்றோர். முத்தி தரும் தலங்கள் ஏழு உண்டு என்றும் அவற்றுள் ஒன்று காஞ்சி என்றும் கூறுவர் சான்றோர்.

முத்தி தரும் நகர் எழில்
முக்கியமாம் காஞ்சி

என்று கூறுவதிலிருந்தும் காஞ்சியின் சிறப்புஒருவாறுபுலனாகும்.காஞ்சிக்கு ஒரு தனிச்சிறப்பு தேவராஜப் பெருமாள்என்பதும் வரதராஜப்பெருமாள் என்பதும், மக்கள் போற்றும் அருளாளப் பெருமான் கோயில் கொண்டு அருள் பாலிப்பதாகும் என்பதும் வைணவப் பெருமக்களின் கருத்தாகும்.

## மூர்த்தியும் கீர்த்தியும்

பொதுவாக வேதாந்திகள் விக்கிரக வழிபாட்டைச் சமய ஞான ஏணி ஏற்றத்தில் ஒரு கீழ்ப்படியாகக் கருதுவார்கள். ஆனால் உபய வேதாந்தக் கொள்கைகளையுடைய வைணவர்களோ விக்கிரகத்தை இறைவனது அர்ச்சாரூபம் என்று மதிக்கிறார்கள். 'உபய வேதாந்தம்' என்பது வடமொழி வேதத்தையும் (அதாவது சுருதி என்ற வேதத்தையும் உபநிஷதங்களையும்) தமிழ்ப்பிரபந்தங்களையும் குறிப்பதாகும். 'அர்ச்சாரூபம்' என்பது கடவுள் தன் பேரருளால் விக்கிரகத்திலும் அவதரித்து (இறங்கிக்) காட்சி தரும் நிலையைச் சுட்டிக்காட்டுகிறது.

இராமாவதாரத்தில் இராமனாகவும், கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணனாகவும் காட்சி வழங்கிய இறைவன் அர்ச்சாவதாரம் என்ற நிலையில் அர்ச்சை அல்லது விக்கிர மூர்த்தியாகக் காட்சி வழங்குகிறான் என்று வைணவர்கள் நம்புகிறார்கள். இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் முதலான அவதார காலங்களில் இறையருள் மழைபோலப் பொழிந்தது என்பர். ஆனால் ஒய்ந்த மழை நீர் தேங்கி நிற்கும் மடு அல்லது குளம் தானே பயன்தரக்கூடும். இத்தகைய நீர்நிலைதான் அர்ச்சாவதாரம் என்று சூத்திரவடிவில் வெளியிடுவதுண்டு.

அர்ச்சாவதாரம் என்ற விக்கிரக நிலை இறைவனது பேரருளுக்குச் சான்றாகஇருப்பதால் அறிஞர்களுக்கு விக்கிரக வழிபாடு அவசியம் இல்லை என்ற அறிவு மதக் கொள்கையை வைணவர்கள் ஒப்புக்கொள்வதில்லை. விக்கிரகமூர்த்திகளைப் பொறுத்தவரையில் அருளாளனாகிய திருமாலின் 'அர்ச்சாவதாரம்' என்று கருதும் போது, 'அருளாளப் பெருமான்' என்று சிறப்பித்துச் சொல்லப் பெறும் வரதராஜப் பெருமாளுக்கு ஒரு தனிச்சிறப்பு ஏற்படத்தான் செய்கிறது. எனவே அருளாளப் பெருமானின் திருக்கோலத்தையும் அதன் உட்பொருளையும் குறித்துச் சிந்தித்துப் பார்ப்பது பக்தர்களுக்கு ஒரு சிறந்த நற்பயன் விளைவிக்கும் காரியம்தான்.

உண்மையான பக்தி ஞானபக்திதான், மூடபக்தி அன்று. இதயத்தை வசீகரிப்பதுடன் அறிவிக்கும் விருந்தாகிறது பக்தி. காஞ்சிபுரத்து ஸ்ரீ வரதராஜபெருமாளை அர்ச்சாவதார நிலையில் வழிபடும் பேறுபெற்றிருக்கும் பொழுது வைகுண்ட வாசத்தையும் தாம் விரும்பவில்லை என்று உறுதி கூறும் வேதாந்த தேசிகனின் அறிவுக் கூர்மையை அறியாதார் யார்?

'அருளே அழகு, அழகே அருள்' என்று சொல்லும்படி அருளாளப் பெருமான் பேரழகராகவும் காட்சி வழங்கியருள்கிறார். இந்த உண்மையைப் புலப்படுத்தவே பெருமாளை அலங்கரிக்கிறார்கள். ஏனென்றால் பெருமாள் அலங்காரப் பிரியன் அல்லவா? காஞ்சிபுரத்து வரதரின் கருடோத்ஸவம் என்றால் அது நாடறிந்த பெருவிழா. (மாசி மகத்தீர்த்த விழாவன்று திருக்கண்ணபுரத்து சௌரிராசப்பெருமான் கருடோத்ஸவம் இதற்கு இணையான விழாவாகும்) மாட்டுப் பொங்கலன்று (ஒவ்வொரு தை மாதம் இரண்டாம் தேதியிலும்) நடைபெறும் திருவிழாவும் பக்தர்களின் அழகுணர்ச் சிக்குப்பெருந்தூண்டுகோலாகஉதவும் முறையில் கொண்டாடப்பெறுகிறது. வரதராஜப் பெருமானின் தோட்ட உற்சவமும் இப்பெருமானின் அழகுக் கோலத்தையும் அருட்கோலத்தையும் பக்தர்களுக்கு உணர்த்துவதுதான். சுருங்கச் சொன்னால், 'அழகிற் சிறந்த அருளாளன் மஹோத்ஸவங்கள் எல்லாமே அழகு' என்று ஒரு நவீன பக்த ரசிகர் கூறியிருப்பது பொருத்தம்தான்.

புலவர் பொன். திருக்கண்ணபுர
சுப்பிரமணியன் - இராசை.

உலகிலுள்ள அழகுகளெல்லாம் இறைவனுடைய எல்லையில்லாத அணிகளாகும். இதை நினைவூட்டப் பெருமாளை ஆடை ஆபரணங்களால் அலங்கரிக்கிறார்கள். விழாக் காலங்களில் வெகு அழகாகவும், கம்பீரமாகவும் அலங்கரிக்கிறார்கள். பூமாலைகளாலும் சிறப்பாக அலங்கரிக்கிறார்கள்.

## சந்தாதாரர்களுக்கு...

*30-4-91*—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர் களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

21 44 178 294 301 308 396 518 638 640 1271 1412 1493 1518 1538 2565 2825 2844 2872 2879 2899 2907 2918 2924 2928 2930 2933 2935 2960 2961 2971 5084 5105 5164 5469 5476 5477 5481 5569 5661 6819 6980 7161 7178 7182 முதல் 7190 7192 முதல் 7218 7220 7223 7238 முதல் 7240 7255 7257 முதல் 7269 7271 முதல் 7276 7278 7279 7282 முதல் 7296 7298 முதல் 7303 7305 7308 7313 7314 7522

**வண்மையுடன் வரம் தருவார்**
**வந்தார் தாமே**

என்றும்,

**தருமவழி அழியாமல்**
**காப்பார் வந்தார்**

என்றும் திருச்சின்னம் ஊத, பெருமாள் புறப்படும் அழகு பக்தர்கள் உள்ளங்களை வசீகரித்து மலரச்செய்கிறது.

கண்ணனுடைய நடையை மானசீகமாக அநுபவித்த பெரியாழ்வார் 'வாரணம் (யானை) பைய நின்று ஊர்வது போல்' என்று அந்த நடையை வருணிக்கிறார். இந்த ஆழ்வாரின்திருமகளான கோதையோ சிங்கம் புறப்பட்டு வருவது போல் கண்ணன் நடையிட்டு வருவதை வருணித்திருக்கிறாள். நின்ற திருக்கோலத்து வரதராஜப் பெருமாள் எழுந்தருளும் போது மேலே சொன்ன இருவகை நடைகளின் கம்பீரமும் நினைவிற்கு வருகிறது அடியார்களுக்கு.

## நின்ற நிலை :

இது நடையழகு என்றால் நின்ற நிலையழகை என்னென்பது? இந்த நிலையே இப்பெருமான் மறைகளும் அறியமுடியாத ஒருவர் என்பதையும், முத்திதரவல்ல முதல்வர் என்பதையும், 'உயர்வற உயர்நலம்' உடையவர் என்பதையும் அன்பர்களை அழகாலும் அருளாலும் ஆட்கொள்ளும் பெருந்தெய்வம் என்பதையும் புலப்படுத்துகிறது என்பர்.

நின்ற கோலத்தில் அருளாளரின் அடியினைச் சிறப்பை அனுபவிக்கும் பக்தர்கள் 'அருளின் அறிகுறி இத்திருவடிகளே' என்பர். இப்பாத மலருடன் தங்கள் நெஞ்சில் மலரும் அன்பு மலரைச் சேர்த்து பூசிப்பர். இத்திருவடிகளைத் 'தர்யகம்' என்று ஆறுதல் அடைவர்.

திருவடி முதல் திருமுடி வரை இத்திருக்கோலத்தைத் தரிசிக்கும் உண்மை சுபாவத்தை இந்த அழகும் அருளும் என்ன பாடுபடுத்துகின்றன தெரியுமா?

**உள்ளுவர் ஆனந்தக் கண்ணீர்**
**உகுப்பர், உகந்தெழுந்து**
**துள்ளுவர், பாடுவர், ஆடுவர்**
**உண்மைச் சுபாவத்தரே**

என்பது அருளாளப் பெருமானின் நின்ற திருக்கோலத்தை அனுபவித்த பக்தர்களின் வாக்கு.

இப்பெருமாளைத் தரிசித்து வரம் பெற வந்தவர்கள் 'இப்படி உன்னை வாழ்த்தி வணங்கும் வரம் பெறுவதே போதும், போதும்' என்கிறார்களாம். 'பேரின்பப் பெருங்கடலே இப்படி இந்த நிர்மலமூர்த்தியாகக் காட்சி அளிக்கிறது!' என்று பரவசமாகிறார்கள். 'அஞ்சல்' என்று அருளும் திருக்கோலம் இது எனப் பூரித்துப் போகிறார்களாம்.

சற்றே சாய்ந்து நிமிர்ந்து கொண்டையுடன் காட்சி தரும் முகமண்டலத்தைத் தரிசிக்கும் பொழுது,

**''மையல் ஏற்றி மயக்க உன்முகம்**
**மாயமந்திரம் தான் கொலோ''**

என்ற ஆண்டாள் வாக்கு நினைவிற்கு வருகிறது. இந்த முகச் சோதியின் அழகு வெள்ளத்திற்கு அணையிடுவது போல் காணப்படுகின்றன குண்டலங்கள். இந்த நிலையில் அபயம் அளிக்கும் திருக்கைகளை தரிச்சிக்கத் தரிசிக்க ஆறுதல் அளிப்பது பக்தர்களுக்குக்கண்கூடான அனுபவம்.

மாலையும் தோளுமாகக் காட்சி தரும் அந்த அழகைத்தான் என்னென்பது?

**'' தோள் கண்டார் தோளே கண்டார் ''**

என்ற அனுபவம்தான். கை அபயமளிக்கத் தோள்களின் ஆண்மை அழகும் கம்பீரமும் துணை புரிகின்றன.

அகன்று பரந்த திருமார்பின் பொலிவும் அணிமணிகளும், அன்பர்களை அணைத்துக் காக்கும் பரஞ்சுடரின் தனிப் பெரும் கரு

ணையை நினைவூட்டுகின்றன. உடனே,

கரைக்கு அடங்காக் கருணைக்கடலே!
என்தன் கண்மணியே !

என்று போற்றத் தோன்றுகிறது பக்த மணிகளுக்கு.

வாழிவரதன், அருளாளன்
என்னும்நம் வானவர்கோன்

என்று வாழ்த்தவும் தோன்றுகிறது.

## திருவடிச் சிறப்பு:

வரதராஜப் பெருமாளின் நின்ற திருக்கோலத்தில் முதல் ஆனந்தம் தருவது திருவடியின் காட்சியல்லவா? இத்திருவடிகளை அல்லவா "துயர் அறுசுடர் அடி" என்று ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வார் வருணித்திருக்கிறார்? என்று எண்ணத் தோன்றுகிறது. இந்த எண்ணத்துடன் இத்திருவடிகள் முதல் திருமுடி வரை மேனியின் பூரணப் பொலிவை ஆபரணங்களுடனும், பூமாலையுடனும் சேவிப்பதுடன், பூக்கள் எல்லாம் களையப் பெற்ற நிலையிலும் ஏகாந்த சேவையாக அனுபவிப்பதில் பக்தர்களுக்கு ஆசை உண்டு.

'உண்மை, அலங்கரிக்கப் பெறாத நிலையில் மிகவும் அதிகமாய் அலங்கரிக்கப்பெற்றது போலக் காண்கிறது!' என்று ஆங்கிலத்தில் கூறுவதுண்டு! மெய்ப் பொருளான அருளாளப் பெருமாளும் பூக்களை எல்லாம் களைந்த நிலையில், சங்கும் சக்கரமுமாய்க் காட்சி வழங்கும் போது 'இதுவோ பேரழகு!' என்ற ஒரு மகத்தான உணர்ச்சியைத் தோற்றுவிக்கிறார். இந்த அனுபவத்தைத் திருவாளர் டி.இராமசுவாமி ஐயங்கார் என்ற அறிஞர் 'வரதராஜ பெருமாளின் தோட்ட உற்சவம்' என்று பொருள் பொதிந்த சிறு நூலில் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

'ஆபரணங்களுக்கு ஆபரணமான, பெருமாள்' என்று பெருமாளைக் குறிப்பிடுவதும் உண்டு. உண்மையே அழகாய் இருக்கும் பொழுது, உண்மைக்கு வேறு அழகும் வேண்டுமோ? இத்தகைய உணர்ச்சியைத் திருமஞ்சன வேளையிலும் பக்தர்கள் பெறக் கூடும்.

இப்பெருமானுடைய திருவடிகளைத் 'துயர் அறு சுடர் அடி' என்று நம்மாழ்வார் சிறப்பித்துப் (பேசுபவன்) பேசுவதன் பொருள் என்ன? பக்தர்களுடைய துயரங்களைப் போக்கிக் கொள்ளுகிறானாம் தன் திருவடிகளாலே! இது எப்படி?

பெருமாளுக்கும் துயரம் இருக்கும் என்று எண்ண முடியுமா? அருளாளராக இருப்பதால் இவருக்கும் ஒரு துயரம் இருக்கிறதாம். அதாவது எல்லோரும் நம் அருளுக்கு இலக்காக வில்லையே என்ற துயரம்தான். அகன்று பரந்து எடுப்பாகக் காணும் அந்தத் திருமார்பிலே இத்துயரம் குடிகொண்டிருக்கிறதாம். இத்துயரத்தைப் போக்குவது எளிமைக்கு அறிகுறியான அத்திருவடிதான்.

திருமுடி அருளாளரின் பெருமைக்கு அறிகுறி, அகிலலோக ஆட்சிக்கு அறிகுறி. இந்த முடிச் சோதியின் எளிமைச் சிறப்பை எடுத்துக் காட்டுகிறார்.

## முன்னழகும் பின்னழகும்:

'முன்பிலும் பின்பழகிய பெருமாள்' என்ற சொற்றொடரும் பெருமாளின் அழகு குறிக்க வழங்கப் படுகிறது.

மைவண்ண நறுங்குஞ்சிக்
குழல்பின் தாழ

என்று திருமங்கையாழ்வாரின் வருணனையை நினைவில் வைத்துக்கொண்டால், பெருமாளின் முன்பக்கத்து அழகுடன் பின்பக்கத்து அழகையும் உணரத் தொடங்கலாம். இக்காட்சியையும் வரதராஜப் பெருமாளின் நின்ற திருக்கோலத்தில் - கேசபாகங்கள் ஒரு முடியாகச் சேர்க்கப்பட்டுத் திருத்தோள்களிலும் திருமுதுகிலுமாகத் தவழும் - நிலையில் கண்டு களிக்கலாம். வரதராஜரின் முன் சேவையைப் போல் பின் சேவையும் அழகு வாய்ந்ததே.

உண்மை அழகாகவும், அருளாகவும் வெள்ளமிடும் பொழுது, முன் எங்கே?—பின் எங்கே? இத்தகைய அழகனை 'என் நெஞ்சம் கோயில் கொண்ட பேரருளாளன்' என்பர் திருமங்கையாழ்வார். இப்படி நெஞ்சுகள் இருக்கும் பொழுது முன்னழகு என்றும் பின்னழகு என்றும் வேறுபடுத்திப் பேசமுடியுமா?



தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், கன்னடம், இந்தி ஆகிய மொழிகளில் வெளி வரும் "ஸப்தகிரி" இதழ்களுக்கு வியாபார விளம்பரங்களைப்பெற்றுத் தர சில நிபந்தனைகளின்பேரில் நாடு தழுவிய தனித்தபிரதிநிதியாக திரு. டி. உமாசங்கர் வல்லூரி அவர்கள் மூன்று ஆண்டுகளுக்கு நியமனம் செய்யப்பட்டுள்ளார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

— ஆசிரியர்.

